

# பெண்கள் கேட்பது நீதி; புள்ளி விவரமல்ல

"டில்லியில் ஆறு மாத காலத்தில் 50 பெண்கள் வரதட்சணைக் கொடுமைக்குப் பலியாகியுள்ளனர். பெண்களுக்கு எதிராக 419 குற்றங்கள் நடந்துள்ளன. 54 கற்பழிப்பு வழக்குகள் பதிவாகியுள்ளன. 95 பெண்கள் துன்புறுத்தப்பட்டதாகவும், 54 பெண்கள் கடத்தப்பட்டதாகவும் புகார்கள் வந்துள்ளன."

— நாடாளுமன்றத்தில் மத்திய அமைச்சர் ப. சிதம்பரம்.

இச் செய்தியைத் தென் சென்னைப் பாராளுமன்ற உறுப்பினர் வைஜயந்தி மாலா பாலியிடம் கூறி, கருத்துக் கேட்ட போது ஒரு திருமண ஃபோட்டோ ஆல்பத்தைக் காட்டி ஆவேசமாய்ப் பேசினார்:

"இதோ பாருங்கள், இந்தப் பெண்ணின் பெயர் பாமா. இவருடைய அப்பா சிவராமன்.* கடந்த ஆண்டு பாமாவை பம்பாயைச் சேர்ந்த அனந்தனுக்குத் திருமணம் செய்து கொடுத்தார். கல்யாணமாகி ஆறேழு மாதம் கூட ஆகவில்லை. இந்த மார்ச் மாதம் பாமா மரணமடைந்தாள்! காரணம் வரதட்சணைக் கொடுமைதான்! சிவராமன் என்னிடம் வந்து தன் பெண்ணின் சோகக் கதையைக் கூறிய போது, வருத்தம் ஏற்பட்டது. மகாராஷ்டிர மாநிலத்தின் போலீஸ் ஐ.ஜிக்கு இந்த விஷயத்தில் துரித நடவடிக்கை எடுக்கச் சொல்லி, கடிதம் அனுப்பியிருக்கிறேன். அனந்தன் இப்போது கைதாகியிருப்பதாய்த் தெரிகிறது. இதுபோன்ற சம்பவங்கள் இப்போது நிறைய நிகழ்கின்றன.

* பெயர்கள் மாற்றப்பட்டுள்ளன.

# சம்பந்தி பயம் நீங்கியது!



*** அவள், உலகப்புகழ்பெற்ற ஒருவரின் மகள்... மத்தியதர வகுப்பைச் சேர்ந்த ஓர் இளைஞனைக் காதலித்துத் திருமணம் செய்து கொள்ள இருந்தாள். திருமணத்துக்கு முதல் நாள் சம்பந்திகள் வந்து இறங்கினர். பெரிய இடத்து வரவேற்பு எப்படி இருக்குமோ என்ற தயக்கம், அவர்களுக்கு இருக்கத்தான் செய்தது. ஆனால் அந்த உலகப் புகழ் பெற்ற மனிதரோ, வெகு இயல்பாகத் தமது புதிய மாடல் 'ஹியரிங் எய்டை'க் கழற்றி மணமகனின் அம்மாவிடமும் பாட்டியிடமும் காட்டி, அது எவ்வாறு இயங்குகிறது என்று விளக்க ஆரம்பித்து விட்டார். அவர்களும் 'நம்ம அத்தைக்கு இதைப் பற்றிச் சொல்லணும்; அவங்களுக்கு உபயோகமா இருக்கும்' என்று பேசிக் கொண்டார்கள்.

எளிய குணம் படைத்த அந்த உலகப் புகழ்பெற்ற மனிதர்: ரேகன்.

## நம்மை நாமாகக் காண...

*** சாதாரணமாக நம்முகத்தைக் கண்ணாடியில்பார்த்துக்கொண்டால்நம்உருவம் இடது வலதாக மாறித்தானே தெரியும்! இது ஒரு பெரிய பிரச்னையாகத் தோன்றுபவர்களுக்கு ஒரு நற்செய்தி...

இரு அமெரிக்கர்கள் சேர்ந்து ஒரு புதிய கண்ணாடியை உருவாக்கியுள்ளனர். இது இடது பக்கத்தை இடது பக்கமாகவும் வலது பக்கத்தை வலது பக்கமாகவும் காட்டும்! எளிமையான முறையில்தான் இது சாதிக்கப்பட்டுள்ளது. இரண்டு கண்ணாடிகளை ஒரே கீலில் பொருத்தியுள்ளனர். ஒன்று 90 டிகிரி கோணத்திலும் மற்றொன்று 75 டிகிரி கோணத்திலும் பொருத்தப்பட்டுள்ளது. ஒரு கண்ணாடியில் பிரதிபலிக்கும் நமது பிம்பம், மற்ற கண்ணாடியால் பிரதிபலிக்கப்படும் போது double reverse ஆகி, நம்மை நாமாகக் காட்டுகிறது. ஆனால் இரண்டு கண்ணாடிகளுக்கும் மத்தியில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் பார்த்தால்தான் இப்படித் தெரியும்!

— நன்றி: நியூஸ்வீக்.

''மக்களின் பாதுகாப்புக்கு உத்தரவாதம் அளிக்க வேண்டிய உள்துறை இணை அமைச்சர் சிதம்பரம், இந்தக் கொடுமைக்காரர்களைத் தண்டிக்க நடவடிக்கை எடுக்காமல், வெறுமனே நாடாளுமன்றத்தில் புள்ளி விவரம் கொடுத்துக் கொண்டிருப்பதால் என்ன பலன்? வரதட்சணைக் கொடுமை செய்பவர்கள், அதிகபட்ச தண்டனை பெறும் வகையில், சட்டத் திருத்தம் கொண்டு வர வேண்டும். வழக்கை இழுத்தடித்துக் கொண்டிருக்காமல், உடனடியாய்த் தண்டனை — அது மரண தண்டனையானாலும் சரி — வழங்கப்பட வேண்டும். இதற்கு உதவியாக, பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதிகள் பற்றிய புகார்களை உடனுக்குடன் விசாரித்து, குற்றவாளிகளுக்குத் துரிதமாகத் தண்டனை தரும் அதிகாரம் படைத்த பிரத்தியேக மையங்கள் **(Exclusive Cells)** அமைக்கப்பட வேண்டும். அப்போதுதான் மக்கள் மத்தியில் பயமிருக்கும். பெண்களைக் கொடுமை செய்து, கொல்லும் பழக்கம் நிற்கும்.

''சமீபத்தில், நேரு நூற்றாண்டு விழா ஓட்டம் டெல்லியில் நடந்த போது நிகழ்ந்தது என்ன? ஓட்டத்தில் கலந்து கொண்ட இளம் பெண்கள் கேலி செய்யப்பட்டார்கள்; அவர்களிடம் ஆண்கள் தரக்குறைவாகவும்; அத்துமீறியும் நடந்து கொண்டார்கள். நேருஜி நூற்றாண்டு விழா ஓட்டத்தின் நோக்கம் எத்தனை உயர்வானது? அதிலே இப்படிப்பட்ட சம்பவங்கள் நடந்துள்ளன என்றால், நாம் போய்க் கொண்டிருப்பது இருபத்தோராம் நூற்றாண்டை நோக்கி இல்லை; பின்னோக்கிப் போய்க் கொண்டிருக்கிறோம் என்றுதான் எண்ணத் தோன்றுகிறது.

''இந்தச் சம்பவங்கள் குறித்துப் பாதிக்கப்பட்ட பெண்களும், அவர்கள் பெற்றோர்களும் போலீஸாரிடம் புகார் சொன்ன போது, அசிரத்தையுடன் 'இதெல்லாம் சகஜம்; இதையெல்லாம் சகித்துக் கொள்ள முடியவில்லையெனில், பேசாமல் வீட்டில் இருக்க வேண்டியதுதானே? ஏன் ஓட வருகிறீர்கள்?'' என்று போலீஸார் கேட்டார்களாம். என்னைச் சந்தித்த பெண்கள், கண்ணீர் விட்டு, இவற்றைச் சொன்ன போது, ஆளும் கட்சி உறுப்பினரானபோதிலும், நாடாளுமன்றத்தில் அந்தப் பெண்கள் சார்பாய்க் குரல் கொடுக்க வேண்டுமென முடிவு செய்தேன். என் பேச்சு, சிலருக்கு அதிர்ச்சியூட்டுவதாய் இருந்தாலும், பல ஆளும் கட்சி எம்.பி.க்களே துணிச்சலுடன் இந்தப் பிரச்னை பற்றிப் பேசியதற்காக என்னைப் பாராட்டினார்கள்.''

சந்திப்பு: எஸ். சந்திரமௌலி.



# ஜில் ஜில்

திரையுலகில் மிகுந்த எதிர்பார்ப்புக்களை ஏற்படுத்தியுள்ள படம் — கமலின் 'அபூர்வ சகோதரர்கள். குள்ளமான கமல் தான் படத்தின் ஸ்பெஷாலிடி. பெயர் அப்பு. படத்திலே அப்புவுக்கு டூயட்டெல்லாம் உண்டாம். படத்தில் அறிமுகமாகும் புதுமுகம் சூரஜ். நடிகையில்லை; ஆஸ்திரேலியக்கிளி! தவிர ராஜா என்ற மனிதக் குரங்கு, இரண்டு புலிகள் (ஜம்போ, பேகம்) இத்தனையும்உண்டு! குள்ளக்கமலுக்குஎன்று பிரத்தியேக மேக் அப். காஸ்டியூமுக்காக பம்பாயிலிருந்து ஸ்பெஷலிஸ்ட்டுகள் வரவழைக்கப்பட்டனர்!

நுங்கம்பாக்கம் லேக் ஏரியாவில் உள்ள நடிகர் விஜயகுமாரின் குட்லக் பிரிவியூ தியேட்டரில், நஷ்டம் வந்ததால் அவர் ஜி. வி.க்கு அதைக் குத்தகைக்கு விட்டுவிட்டார். ஜெமினி வாசன், ஏவி. எம். செட்டியார் போல, ஜி. வி.க்கும் தொட்டதெல்லாம் ராசி போலிருக்கிறது. இப்போதெல்லாம், பிரிவியூ தியேட்டர் பயங்கர பிஸி.

கடந்த செவ்வாயன்று, சென்னை லயோலா கல்லூரியின் திரைக்கலை மன்றம், ஒருநாள் கருத்தரங்கம் ஒன்றை நடத்தியது. அரங்கம் நிரம்பி வழிந்தது. பங்கேற்றவர்கள்: இயக்குனர் சொர்ணம், வைரமுத்து, பாரதிராஜா, ராதாரவி, அமைச்சர்கள் பொன். முத்துராமலிங்கம், துரைமுருகன். கருத்தரங்கின் பொருள்? ''கலைஞரின் சினிமா இலக்கியம்''!

லயோலாவின் பேராசிரியர் ராமுவிடம், ''கலைஞர் முதல்வராகி விட்டதால், இப்படியொரு கருத்தரங்கமா?'' என்று கேட்ட போது, ''நிச்சயமாய் இல்லை. கலைஞர் எதிர்க்கட்சித் தலைவராய் இருந்த போதே, அவருடைய படைப்பைப் பாடப் புத்தகமாய் வைத்திருக்கிறோம், எங்கள் கல்லூரியில்'' என்றார்.





இயக்குனர் மணிரத்தினம் தமது தெலுங்குப் படத்தை ஏப்ரலில் வெளியிடுகிறார். அதன் பின்தான் தமது அடுத்த தமிழ்ப் படவேலைகளை ஆரம்பிக்கப்போகிறார். இப்போதைக்கு 'அஞ்சலி' என்று படத்தின் தலைப்பும், இரண்டு வரியில் கதையும் தான் கைவசம் இருக்கின்றன.

வருடம் ஒரு படம்தான் தயாரிப்பது என்பது மணிரத்தினம் கடைப்பிடிக்கும் கொள்கை என்பதால், அஞ்சலி, டிசம்பரில் தான் ரிலீஸ்.

அமரர் எஸ். வி. சகஸ்ரநாமத்தின் முதலாமாண்டு நினைவஞ்சலிக் கூட்டம் சமீபத்தில் நடந்தது. அதிலே நாடக உலகினர் பலரும் பேசினார்கள். பேச்சின் போது ஓர் அதிசயமான தகவல் வெளிப்பட்டது: எழுத்தாளர் ஜெயகாந்தனும், நடிகர் தங்கவேலுவும் ஒன்றாக நாடகங்களில் நடித்திருக்கிறார்கள்!

— ஜூலி



# மீன் பண்ணையில் பணம் பண்ணலாம்...

'கெண்டை மீன்கள் துள்ளி விழும் நீர் நிலைகளைக் கொண்ட, வளம் பொருந்திய நாட்டின் தலைவனே...' என்ற வர்ணனையைச் சங்கத் தமிழ் இலக்கியங்களில்தான் நாம் படித்திருக்கிறோம். அத்தகைய காட்சியை நேரில் கண்ட போது எங்கள் மனமும் மீன்களைப் போலவே உற்சாகத்துடன் துள்ளியது.

சென்னையை அடுத்துள்ள தாம்பரத்தைத் தாண்டி, காஞ்சிபுரம் செல்லும் சாலையில் உள்ளது படப்பை என்ற கிராமம். ரோஜா, மல்லி, டிசம்பர் போன்ற பூந்தோட்டங்களுக்குப் பெயர்போன இக்கிராமத்தில்தான் 'புஷ்பகிரி மீன் விதைப் பண்ணை' உள்ளது. இயற்கையான குளங்களும் நீர்நிலைகளும் இல்லாவிட்டாலும், செயற்கைக் குளங்களைத் தோண்டி, கிணற்று நீர் கொண்டு அவற்றை நிரப்பி, இங்கு மீன்களை வளர்த்து வருகிறார்கள்.

செயற்கை நீர் நிலைகளில் கெண்டை மீன்கள் வளர்ப்பதில் தமிழகத்திலேயே முன்னோடியாக விளங்கி, ஆண்டொன்றுக்கு ஒரு ஹெக்டேரில் பதினைந்து டன் மீன்களை விளைவித்துச் சாதனை புரிந்துள்ளது இப் பண்ணை. **'Fish seed'** என்று சொல்லப்படும் மீன் குஞ்சுகளைச் 'செயற்கை' முறையில் உற்பத்தி செய்து, நல்ல தரமான இனங்களை உருவாக்கி, விற்பனை செய்யும் தொழிலிலும் ஈடுபட்டுள்ளனர் புஷ்பகிரி மீன் விதைப் பண்ணையை இணைந்து நடத்தும் சமரஸம்–நாஸ்திகம் சகோதரர்கள். வெள்ளிக் கெண்டை, புல் கெண்டை போன்ற ரகங்கள் தவிர, 'பொன் கெண்டை' **(golden carp)** என்னும் புதிய இன மீன் ஒன்றையும் உருவாக்குவதில் ஈடுபட்டுள்ளனர். (அட்டையில் ஸமரஸம் ஸசி போடுவது பொன் கெண்டை மீனுக்கு).

செயற்கை முறையில் மீன் குஞ்சுகளை உற்பத்தி செய்வது எப்படி...? ஜூன் முதல் செப்டம்பர் மாதம் வரை மீன்கள் இயற்கையில் இனப் பெருக்கம் செய்யும் காலம். இந்த மாதங்களில் ஆரோக்கியமான, வயது வந்த ஆண், பெண் மீன்களை முதலில் தேர்ந்தெடுக்கிறார்கள். இவற்றைத் தனித்தனியே குழிவான வலைகளில் இட்டு **Chinese breeder tank** என்ற வட்டமான தண்ணீர்த் தொட்டிக்குள் வைக்கிறார்கள்.

இந்தத் தண்ணீர்த் தொட்டியில், மூன்று மட்டங்களில் துளைகள் உள்ளன. அத் துளைகள் வழியே நன்றாகக் குளிர்விக்கப் பட்ட (27° முதல் 31° சென்டிகிரேட்) தண்ணீர் 45 டிகிரி கோணத்தில் பீய்ச்சப் பட்டுத் தொட்டிக்குள் விழுகிறது. மழை பெய்வதைப் போன்ற உணர்வை இது தருவ தோடு, தண்ணீரை மேலும் குளிர்வித்து, அதிலுள்ள ஆக்ஸிஜன் அளவை அதிகரிக் கின்றது. நான்கு மணி நேரம் இந்தக் குளிர்ந்த மழையில் நனையும் மீன்கள் இனப் பெருக்கத்துக்குத் தயாராகின்றன. பிறகு பெண் மீன்களுக்கு ஹார்மோன் ஊசி போடப்படுகிறது. இந்த ஊசி போட்டு ஆறு மணி நேரம் கழித்து, இரண்டாவதாக மீண் டும் ஒரு டோஸ் ஹார்மோன் பெறுகின்றன பெண் மீன்கள். ஆண் மீன்களுக்கும் இப்போது ஊசி போடப்படுகிறது. இனப் பெருக்கத்துக்கு உதவும் இந்த மருந்துகளைச் செலுத்திய பிறகு, ஒரு பெண் மீனுக்கு இரண்டு ஆண் மீன்கள் என்ற விகிதத்தில் மீன்கள் வலைகளிலிருந்து விடுவிக்கப்பட்டு **breeder tank** தொட்டிக்குள் விடப்படுகின் றன. இதிலிருந்து நான்காவது மணி நேரத் தில் பெண் மீன்கள் முட்டை இட ஆரம்பிக் கின்றன.

• குஞ்சுகளைக் கண்ணாடிக் குப்பிகளில் அளந்து...





...பிளாஸ்டிக் பைகளில் இடுகிறார்கள். •

முட்டைகள் இட ஆரம்பிக்கும் தரு ணத்தில் **breeder tank**–ல் உள்ள தண்ணீர், அதன் அடியில் உள்ள சிறிய துவாரம் வழியே உறிஞ்சப்பட ஆரம்பிக்கிறது. மேலும் புதிய தண்ணீர் விழுந்து தொட்டியை நிரப்புகிறது. உறிஞ்சப்பட்டு வெளியேறும் தண்ணீருடன் ஜவ்வரிசி போல் உள்ள ஆயிரக்கணக்கான மீன் முட்டைகள் வெளி யேறி மற்றொரு வட்டமான தண்ணீர்த் தொட்டியை அடைகின்றன. **Hatchery** என்ற இத் தொட்டியின் அடியில் உள்ள வாத்தின் அலகையொத்த குழாய்கள் வழியே தண் ணீர் சுழற்சியுடன் பாய்கிறது. இந்த நீர் சுழற் சியில் 72 மணி நேரம் வரை முட்டைகள் வைக்கப்படுகின்றன. நல்ல ஆரோக்கியமான முட்டைகள் தண்ணீரில் தங்குகின்றன. அழுகி, வீணாகும் முட்டைகள், தொட்டியின் மையத் தில் உள்ள தூண் போன்ற அமைப்பைச் சுற்றியுள்ள வலையில் போய் ஒட்டிக் கொள் கின்றன.

பன்னிரண்டு முதல் பதினெட்டு மணி நேரம் தண்ணீர் சுழற்சியில் இருந்ததும் முட்டைகள் பொரிய ஆரம்பிக்கின்றன. இவற்றிலிருந்து வெளிப்படும் குஞ்சுகள் கொசுவில் பாதியளவே இருக்கும்! முட்டை யிலிருந்து வெளிப்பட்ட முதல் 76 மணி நேரத்துக்கு மீன் குஞ்சுகளுக்கு **'yolksacfeed'** எனப்படும் முட்டைக் கரு உணவை இயற் கையே அளித்துள்ளது. இதற்குப் பிறகுதான் இரை தேடி மீன் குஞ்சுகள் உண்ண வேண் டும். எனவே 76 மணி நேர கெடுவுக்குப் பிறகு மீன் குஞ்சுகள் அளக்கப்பட்டு, சிமெண்ட் கான்க்ரீட் தொட்டிகளில் இடப் படுகின்றன. இந்தச் செயற்கைக் குளங் களுக்கு இயற்கை நீர் நிலைகளின் வளங் கள் ஊட்டப்பட்டுள்ளன. தொட்டிகளின் அளவைப் பொறுத்து, மீன்களின் எண்ணிக் கையும் அமையும்.

மீன்களுக்குச் சத்தான உணவு வழங்கப் படுகிறது. நாற்பது, நாற்பத்தைந்து நாட்



சமரஸம் நாஸ்லிகம்

களுக்கு இவ்வாறு வளர்ந்த பிறகு, மீன்கள் கான்க்ரீட் தொட்டிகளிலிருந்து நீக்கப்பட்டு, பூமியில் வெட்டப்பட்டுள்ள செயற்கைக் குளங்களில் விடப்படுகின்றன.

ஒரு நர்ஸரியில் பூச்செடி விதைகளைத் தேர்ந்தெடுத்து, ஊன்றி, நாற்றுகளை வளர்த்து, செடிகளாக்கி மலரச் செய்வது போல் மீன்களையும் பாதுகாத்து வளர்ப்பதற்குத் தக்க காரணம் இருக்கிறது.

இயற்கையான சூழலில் இனப் பெருக்கம் நடைபெறும் போது பெறப்படும் முட்டைகளின் அளவும் தரமும் சராசரியாகவோ அதற்குக் குறைவாகவோதான் இருக்கும். செயற்கைத் தூண்டுதலால் உருவாகி, செயற்கைப் போஷாக்கிலும் பாதுகாப்பிலும் வளரும் மீன்களுக்கு நோய்த் தடுப்பும் செய்யப்படுவதால் அவை இயற்கையில் வளரும் மீன்களைப் போல் நோய்களால் பாதிக்கப்படுவதில்லை. மேலும் இத்தனை சதுரடியில் இவ்வளவு மீன்கள் என்ற விகிதாசாரத்தில் அவை வளர்க்கப்படுவதால் உணவுப் பஞ்சம் ஏற்படுவதில்லை. ஒரே இன மீன்களே ஓரிடத்தில் வளர்வதால் அவை வேறு பெரிய மீன்களுக்கு இரையாவதில்லை. அவற்றிடமிருந்து உணவுப் பங்கீட்டுக்குப் போட்டியும் இருப்பதில்லை. மீன் பண்ணை வைக்க விரும்புவோர் நாடும் தரமான மீன் குஞ்சுகளைத் தட்டுப்பாடு இன்றி வழங்க முடிகிறது.

* சைனீஸ் ஹாட்சரி.



"மீன் விதைப் பண்ணை அமைத்து நடத்துவது மிகவும் லாபகரமானது என்றாலும் இது எல்லோரும் செய்யக்கூடிய தொழிலன்று" என்று கூறுகிறார் சமரஸம். "இதை வெற்றிகரமாகச் செய்ய, மிக ஆழ்ந்த ஈடுபாடு, மீன்களைப் பற்றிய அறிவு, நவீன முறைகளில் தேர்ச்சி மற்றும் நடைமுறை அனுபவம் ஆகியவை நிறைய வேண்டும். மீன்களைக் கையாள்வதில் நிறைய கவனமும் எச்சரிக்கையும் தேவை. உடல் கை, கால்கள் சுத்தமாக இருக்க வேண்டும். இனப்பெருக்க சீசனில் எங்கள் வீட்டுக் குழந்தைகளைக் கூடப் பொட்டாஷியம் பெர்மாங்கனேட் கலந்த தண்ணீரில் கை, கால்களைக் கழுவிக் கொள்ளச் செய்வோம்.

"மீன் விதைப் பண்ணை அமைப்பது கஷ்டம் என்றாலும் மீன் வளர்ப்பு எளிது. ஒவ்வொருவரும் தமது சக்திக்கும், நேரத்



* சைனீஸ் ப்ரீடர் டாங்க்.

துக்கும், வசதிக்கும் ஏற்ப மீன் குஞ்சுகளை வாங்கி, வளர்த்து, விற்பனை செய்யலாம். இதற்கு மிகவும் குறைந்த முதலீடே தேவைப்படும். உயிருள்ள மீன் கிலோ இருபது ரூபாய்க்கும், உயிரற்ற மீன் கிலோ பதினைந்து ரூபாய்க்கும் சராசரியாக விற்பனையாகிறது. கிலோவுக்குப் பன்னிரண்டு ரூபாய் விலை பெற்றால் கூட நிறைய லாபம் கிடைக்கும்."

— இவ்வாறு கூறும் சமரஸத்தின் மீன் விதைப் பண்ணையிலிருந்து தமிழ்நாடு அரசு மீன் வளத்துறை உள்படப் பலர் மீன் குஞ்சுகளை வாங்கிச் சென்று வளர்த்தும், விற்றும் லாபம் பெற்று வருகின்றனர்.

இந்த மீன் குஞ்சுகளை விற்பனைக்கும் பிரயாணத்திற்கும் தயார் செய்வதே தனிக் கலை! தமது பண்ணையில் வாங்கிச் செல்லப்படும் குஞ்சுகள், நாற்பத்தெட்டு மணி நேர பிரயாணத்தைத் தாக்குப்பிடிக்கும் என்கிறார் சமரஸம். விற்பனைக்குத் தேர்ந்

# நியுபான்

## தாயின் அரவணைப்புக்கு ஈடான சிறந்த ஜீரண டானிக்




**சிறந்த மூலிகைகளைக் கொண்டு குழந்தைகளுக்காகத் தயாரிக்கப்பட்ட ஜீரண டானிக். பாதுகாப்பானது.**






குழந்தை பசியின்மை, வயிற்று வலி, விக்கல், வயிற்றுப் பொருமல், எதுக்களித்தல், மலபந்தம், பேதி முதலியவைகளால் பாதிக்கப்படலாம். இதனால் தேவையற்ற அழுகை, அமைதியற்ற தன்மை, தூக்கமின்மை ஆகியவையும் மற்றும் ஜலதோஷம், இருமல் ஆகியவையும் ஏற்படக்கூடும். அனுபவமிக்க தாய்மார்கள் பன்னெடுங்காலமாகத் தங்கள் குழந்தைகளின் ஜீரண சக்தியை வலுப்படுத்தவும், உடல் ஆரோக்கியத்தைப் பாதுகாக்கவும் உபயோகித்து நல்ல பலன் கண்ட சிறந்த மூலிகைகளான ஓமம், வசம்பு, சிற்றரத்தை, அதிமதுரம், திப்பிலி, கடுக்காய், ஏலக்காய் ஆகியவைகள் தேவையான அளவு நியுபானில் சேர்க்கப்பட்டுள்ளன. குழந்தை முழுமையான ஆரோக்கியத்துடனும், புஷ்டியாகவும் வளர விரும்பிச் சாப்பிடக்கூடிய ஜீரண டானிக்கான நியுபான் அவசியம் ஒவ்வொரு வீட்டிலும் இருக்க வேண்டியது தொடர்ந்து கொடுத்து நல்ல பலன் காணவும்.

**ஆல்கஹால், போதைப் பொருட்கள், சோடியம்- பை-கார்பனேட் கலப்பு இல்லாதது.**

PHARM PRODUCTS

'விஜய்', மருத்துவக் கல்லூரி சாலை, தஞ்சாவூர் - 613 007, தமிழ்நாடு.
தொலைபேசி எண் : 22025|22225 டெலக்ஸ் : 0468-205 PPPL IN

**மருந்துக் கடைகளிலும், ஜெனரல் ஸ்டோர்களிலும் கிடைக்கும்.**

SOBHAGYA



* செயற்கைக் குளத்தில் வலை போடுகிறார்கள்.

தெடுக்கப்பட்ட குஞ்சுகளைத் தனித் தொட்டிகளில் தூய தண்ணீரில் இடுகின்றனர். பத்து மணி நேரம், இடைவெளியின்றி, இத் தொட்டியின் நீர் வடிய, வடிய மேலும், மேலும் புதிய தண்ணீர் பாய்ச்சப்படுகிறது. தொட்டியில் இயற்கை செயற்கை உணவுப் பொருள் ஏதும் இல்லாததால் மீன் குஞ்சின் உள்ளும் புறமும் சுத்திகரிக்கப்படுகின்றன.

தூய மீன் குஞ்சுகள் ஆழாக்கு போன்ற கண்ணாடி அளவைக் குப்பிகளில் அளக்கப்படுகின்றன. நான்கைந்து அளவைகளின் சராசரி கணக்கிடப்பட்டு ஓர் அளவையின் எண்ணிக்கை நிர்ணயிக்கப்படுகிறது. அளந்து எடுக்கப்பட்ட மீன்கள் சிறிதளவு தண்ணீர் நிரம்பிய வலுவான பிளாஸ்டிக் உறைகளில் இடப்படுகின்றன. பிறகு பிளாஸ்டிக் உறை, ஆக்ஸிஜனால் நிரப்பப்பட்டுக் கட்டப்படுகிறது. கட்டிய உறையை அப்படியே தகர டின்களில் இறக்கி மூடி விடுகிறார்கள். மீன்கள் சுத்தமாக இருப்பதாலும் நிறைய ஆக்ஸிஜன் இருப்பதாலும் நீண்ட, கடும் பயணத்தையும் தாக்குப் பிடிக்கின்றன.

மீன் குஞ்சுகள் வாங்குவதற்காக வருவோரைத் தவிர, மீன் வளர்ப்புப் பற்றிய ஆலோசனைகள் பெறவும், பயிற்சி பெறவும் பலர் புஷ்பகிரி பண்ணைக்கு வருகிறார்கள்.'

பள்ளியிறுதி வரையே படித்துள்ள சமரஸம் தமது ஆர்வத்தாலும் சொந்த முயற்சியாலுமே விஷய ஞானம் பெற்று முன்னேறியவர். 1980—81 இல் சிறிய அளவில் ஆரம்பிக்கப்பட்டது புஷ்பகிரி மீன் விதைப் பண்ணை. ''அதற்கு வங்கிக் கடன் பெற மூன்று வருடங்கள் அலையோ அலை என்று அலைய வேண்டியிருந்தது. இப்போது என்னடாவென்றால் 'சார், யாரேனும் மீன் பண்ணை ஆரம்பிக்க விரும்பினால் எங்களிடம் அனுப்புங்கள்; நாங்கள் உதவுகிறோம்' என்று வங்கிகள் எங்களைக் கேட்கின்றன'' என்று கூறினார் சமரஸம். இத் துறையில் உள்ள வளமான எதிர்காலத்துக்கு இதுவே ஊக்கமளிக்கும் சான்று.

— சீதா ரவி

அட்டை வண்ணப்படங்களும்; மற்ற படங்களும்: கே. வி. ஆனந்த்

## விலங்குகள் சார்பில் ஒரு போராட்டம்

*** ஆன்டிபயாடிக் ஊசிகளையும் ஹார்மோன் மருந்துகளையும் செலுத்திப் பன்றிகளை வதைக்கக் கூடாது. அவற்றுக்கு உண்ணவும், உறங்கவும் தனித் தனி இடங்கள் ஒதுக்க வேண்டும்; அவற்றைக் கட்டிப் போடக் கூடாது; கோழிகளை நீண்ட நேரத்துக்குக் கூண்டில் அடைத்து வைத்துத் துன்புறுத்தக் கூடாது; மாடுகள் விரும்பிய நேரத்தில் புல் மேய வசதியாக அவற்றை விசாலமான எல்லைக்குள்தான் அடைத்து வைக்கலாம் — என்ற ரீதியில் பல உரிமைகளை மிருகங்களுக்கு வழங்கும் சட்டங்களை இயற்றியுள்ளது ஸ்வீடன் நாட்டு அரசாங்கம். இந்தச் சட்டங்கள் இயற்றப்படுவதற்கு மூல காரணமாக இருந்தவர் எண்பத்தோரு வயதான குழந்தை எழுத்தாளர் ஆஸ்ட்ரிட் லிண்ட்கிரென். உணவுக்காக வளர்க்கப்படும் மிருகங்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளை எதிர்த்து இவர் ஒரு பேனா யுத்தம் நடத்தினார். பொது மக்கள் விழிப்படைந்து ஓர் இயக்கமே ஆரம்பித்தனர். பல வருடங்களுக்கு முன் ஆரம்பிக்கப்பட்ட இவ்வியக்கம் வாயில்லா ஜீவன்களின் குரலாக ஒலித்து, இப்போது நல்ல பயனை விளைவித்துள்ளது. மாமிசத்துக்காக விலங்குகளைக் கொல்லும் போது கூட வலி தெரியாமல் கொல்ல வேண்டும் என்கிறது புதிய சட்டம்.



* ஆஸ்ட்ரிட் லிண்ட்கிரென்

— நன்றி: நியூஸ் வீக்



# கல்கி

1989 ஏப்ரல் 2
மலர் 47 இதழ் 35
விபவ பங்குனி 20



## தி. மு. க. ஆட்சியில் முதல் தடுமாற்றம்!

**போ**லீஸ் உயர் அதிகாரி துரை தட்டியிலே பாய்ந்தால், ஜெயலலிதாவின் அரசியல் ஆலோசகர் நடராஜன் கோலத்தில் பாய்கிறார்! ஜெயலலிதாவின் ராஜினாமா கடிதத்தை வெளியிடுமாறு போலீஸ் தம்மை வற்புறுத்தியதாகவும், தாம் மறுத்து விட்டதால் தம் மீது பொய் வழக்கு ஜோடிக்கப்பட்டுள்ளதாகவும், போலீஸார் வந்து போன பிறகு தமது வீட்டில் இருந்த சில நகைகளைக் காணோம் என்றும் நடராஜன் கூறியிருப்பது அவரது சாமர்த்தியத்தை மட்டுமல்ல, அவர் ரொம்ப ஆபத்தானவர் என்பதையும் உணர்த்துகிறது! அவர் அரசு அதிகாரியாக இருந்தபடியே ஜெயலலிதாவுக்கு அரசியல் ஆலோசகராகவும் செயல்பட்டபோதே அவர் எப்படிப்பட்டவர் என்பது நமக்குப் புரிந்து போயிற்று. இத்தகைய ஒருவரை அரசியல் ஆலோசகராகக் கொண்டிருக்கும் ஜெயலலிதா, அரசியலில் சிறப்பாகப் பணியாற்ற முடியுமா என்ற நமது சந்தேகமும் பல தருணங்களில் மெய்ப்பிக்கப் பட்டுள்ளது. சமீபத்திய உதாரணம்தான் ராஜினாமாக் கடிதம்.

ஜெயலலிதா முழங்கால் வலி காரணமாக ராஜினாமா எழுதி வைத்ததாக ஹண்டே கூறினாலும் அதனை அவராலேயே நம்ப முடியாது! கட்சிக்குள் நடக்கிற பல விஷயங்கள் ஜெயலலிதாவுக்கு ஏமாற்றமளித்து, அந்த விசனத்தின் விளைவுதான் ராஜினாமாக் கடிதம் என்பது பகிரங்க ரகசியம்! ஆனாலும் ஒரு கட்டத்தில் ராஜினாமாக்




கடிதம் எழுதிய ஜெயலலிதாவுக்கு, அடுத்த நிலையில் தமது செயல் தவறு என்று தோன்றினால், கடிதத்தை அனுப்பாமல் வைத்திருக்கவோ, அழிக்காமல் வைத்திருக்கவோ கூடப் பூரண உரிமை உண்டு. நேற்றைய நமது முடிவு ஒன்று தவறானது என்று நாம் தீர்மானிக்கும் போது, அதனை இன்று திருத்திக் கொள்வது குற்றமல்ல; புத்திசாலித்தனம். அதற்காக ஜெயலலிதாவைப் பழிப்பதும் பரிகசிப்பதும் நாகரிகமல்ல.

ஜெயலலிதாவின் கடிதம் — அனுப்ப வேண்டாம் என்று அவர் முடிவு செய்த ஒரு கடிதம் — சபாநாயகருக்கு எப்படிப் போய்ச் சேர்ந்தது என்ற மர்மம் விடுவிக்கப்படாவிட்டாலும், மக்கள் மத்தியில் போலீஸார் மீதுதான் பலமான சந்தேகம் விழுந்திருக்கிறது. இந்தக் கறையைத் துடைப்பது, சென்னை போலீஸுக்கு மிகவும் கடினமான காரியமாக இருக்கப் போகிறது.

இதற்கு மறுபுறமாக, அ. தி. மு. க. வின் கணக்கு வழக்குகள் பற்றிக் கிடைக்கும் செய்திகளும் மர்மத் தொடர் கதையாக வளர்ந்து வருகின்றன. தேர்தலில் நிற்க டிக்கெட் கொடுப்பதாகச் சொல்லிப் பணம் பெறப்பட்டது என்றும்; டிக்கெட்டும் தரவில்லை, பணமும் திரும்பி வரவில்லை என்றும்; ரசீது, துப்பாக்கி முனையில் பறிக்கப்பட்டது என்றும் சுமத்தப்பட்ட குற்றச்சாட்டு, அ. தி. மு. க.வுக்குப் பெரும் களங்கத்தை ஏற்படுத்தியுள்ளது. நடராஜன் மீது இன்றுள்ள இந்த வழக்கைத் தள்ளி விட்டால் கூட, கணக்கு வழக்குகளில் நேர்மைக் குறைவு அ. தி. மு. க.வில் நிலவுவதை யாரும் எளிதில் உணரலாம்.

ஆனால் ஒரு புகார் மீது நடவடிக்கை எடுக்கப் புறப்பட்ட போலீஸார், ஜெயலலிதா தலைமையிலான அ. தி. மு. க. என்பதாலேயே அத்துமீறி நடந்து கொண்டிருக்கிறார்கள் என்பதும் தெளிவு. உள்ளங்கை புண்ணுக்குக் கண்ணாடி தேவையில்லை. எல்லா எஃப். ஐ. ஆர். மீதும் இதே அளவு சுறுசுறுப்புடன் போலீஸ் நடவடிக்கை எடுக்கிறதா? இல்லையே! அவ்வாறு நிதானமிழந்து இயங்கினால் நாட்டில் அராஜகம் அல்லவோ தாண்டவமாடும்? மெத்தனம் கூடாதுதான்; வரம்பு மீறலும் கூடாது.

போலீஸாரின் இந்த அரசியல் கண்ணோட்டத்துக்கு முதல்வரின் ஆசி கிட்டவில்லை என்று நம்புவது மக்களுக்குக் கஷ்டம். 'அ. தி. மு. க. ஆட்சியில் நாங்கள் துன்புறுத்தப்பட்டோமே' என்று முதல்வர் இத்தருணத்தில் பேசுவது, அவருக்குப் பெருமை சேர்க்கவில்லை. தி. மு. க. ஆட்சியில் ஏற்பட்டுள்ள முதல் தடுமாற்றம் இது. இதுவே கடைசியாகவும் இருக்கட்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# ஒரு குரல் அழுதால்!
















தமது மனைவிக்குப் பல காலமாகத் தாம் துரோகம் செய்து வந்திருப்பதாக டி. வி. யில் ஒப்புக் கொண்டு ஒரு குரல் அழுதார் ஆஸ்திரேலியப் பிரதமர் ராபர்ட் ஹாக்.

# திடீர் சோதனைகள் நிரந்தரப் பலன் அளிக்குமா?

இப்போதெல்லாம் அமைச்சர்கள் திடீர் சோதனைகளில் ஈடுபடுகிறார்கள். இந்தச் சோதனைகளால், ஊழியர்களின் கடமையுணர்ச்சி அதிகரிக்கப்பட்டு, நிரந்தர நல்ல விளைவுகள் ஏற்படுமா அல்லது, அப்போதைக்கு ஏற்படும் பரபரப்போடு சரியா? இது பற்றி இரண்டு அமைச்சர்கள் சொல்கிறார்கள்:

**மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் பொன்முடி:**

நான் அமைச்சரானவுடன் பல்வேறு ஆஸ்பத்திரிகளுக்குச் சென்று திடீர் சோதனையில் ஈடுபட்டேன். கடந்த பல வருடங்களாகவே, நிர்வாகத்தில், சுறுசுறுப்பு மறைந்து, மெத்தனம் ஏற்பட்டிருந்தது. இந்தப் போக்கை நீக்குவதற்காகவே திடீர் சோதனைகள். என் நோக்கம் யாரையும் புண்படுத்துவது அல்ல. அதே நேரத்தில் தவறு செய்த ஊழியர்களைத் தண்டிக்கவும் நான் தயங்கியது கிடையாது. என்னுடைய இந்தச் சோதனைகள் நல்ல பலனை உண்டாக்கும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. உதாரணமாக, திருச்சியில் பெரிய ஆஸ்பத்திரியின் நிலை மிகவும் மோசமாக இருந்தது. நான் இரண்டாவது முறை சென்ற போது குறைகள் சரிசெய்யப்பட்டிருந்தன. ஊழியர்களுக்குத் தற்போது ஒரு பயம் ஏற்பட்டிருக்கிறது. இந்தப் பய உணர்ச்சியே அவர்களுக்குக் கடமையுணர்ச்சியையும் தூண்டிவிடும் என்று நம்புகிறேன். என் திடீர் சோதனைகள் பற்றி டாக்டர் கலாநிதி சொன்ன கருத்தை நான் விமர்சிக்க விரும்பவில்லை.

இதே போல், தொடர்ந்து திடீர் சோதனையில் ஈடுபட முடியுமா? என்று பலர் கேட்கிறார்கள். என் துறையைப் பொறுத்தமட்டில், அதிகாரங்களைப் பரவலாக்கி இருக்கிறேன். இதனால், அதிகாரிகளின் கண்காணிப்பு தொடர்ந்து இருக்கும்.





**உள்ளாட்சித்துறை அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகம்:**

மாநகராட்சியிலிருந்து பஞ்சாயத்து நிலை வரை கண்காணிப்பது எங்கள் இலாகா தான். சென்னை மாநகராட்சி அலுவலகத்தில் திடீர் சோதனைகள் செய்தது மட்டுமல்லாமல், கிட்டத்தட்ட எல்லா டிவிஷன்களிலும், அதிகாரிகளோடு சென்று சோதனையில் இறங்கியிருக்கிறேன். நல்ல விளைவுகள் ஏற்பட்டிருக்கின்றன. எரியாத தெரு விளக்குகள் எரிகின்றன. தெருக்களில் குப்பைகள் எடுக்கப்படுகின்றன. ஊழியர்கள் சரியான நேரத்திற்கு அலுவலகத்திற்கு வந்து விடுகிறார்கள். அதிகாரிகளும், விழிப்புடன் செயல்படுகிறார்கள். சென்னை நகரத்தைப் பொறுத்தமட்டில் மாநகராட்சிப் பணிகளில் கிட்டத்தட்ட எழுபது சதவீதம், முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது.

இது ஆரம்ப சூரத்தனமோ, அல்லது விளம்பர அரிப்போ இல்லை. தொய்வு ஏற்பட்டிருந்த நிர்வாகத்தைத் தட்டி உசுப்பி விடும், ஒரு பணிதான். இந்தப் பணி, தொடர்ந்து நாங்கள் பதவியில் இருக்கும் வரை நீடிக்கும்.

பேட்டி: ப்ரியன்
படங்கள்: சுபா.



சீட்டுகள் பற்றி அனைவருக்கும்
ஓரளவு தெரியும், ஆனால்
பலருக்குப் பெருமளவு தெரியாது.

**இதோ முழுமையான காட்சி.**
**1,25,000 சந்தாதாரர்களின் நம்பிக்கையைப்**
**பெற்றுள்ள கம்பெனியே சாட்சி.**



இதை எளிதில் புரிந்து கொள்ளலாம். உங்களைப் போன்ற சந்தாதாரர்களைக் கொண்ட ஒரு தொகுக்கப்பட்ட குழுவினர், குறிப்பிட்ட காலம் வரையில், ஒவ்வொரு மாதமும் ஒரு நிர்ண யிக்கப்பட்ட தொகையைக் கட்டுகிறார்கள். ஒவ்வொரு சந்தா தாரருக்கும் ஒவ்வொரு மாதத்திலும் ஒழுங்குமுறை ஏலத்தில் பணம் எடுக்கும் உரிமை வழங்கப்படுகிறது. சீட்டின் அசலான மதிப்புக்கும், ஒவ்வொரு ஏலத்திலும் விடப்படும் தொகைக்கும் இடையில் வித்தியாசமாக உள்ள தொகை, சந்தாதாரர்களுக்கிடையே இலாபப் பங்காக (டிவிடெண்டாக) பகிர்ந்தளிக்கப்படுகிறது. எனவே, நீங்கள் மாதந்தோறும் கட்டும் சந்தாத் தொகை கணிசமாகக் குறைந்து விடுகிறது.

அது மட்டுமல்ல! உங்கள் சீட்டுத் தொகையைப் பயன்படுத்தத் திட்டமிடும் சக்தி, இப்போது உங்கள் கையில் உள்ளது. தேவைப் படும்போது நீங்கள் பணத்தை ஏலத்தில் எடுக்கலாம். அப்போது, கடன் வாங்குபவர் என்னும் முறையில், நீங்கள் கடனுக்காக குறைந்தபட்ச விலையைத்தான் செலுத்துகிறீர்கள். மாறாக, முதலீடு செய்பவர் என்னும் முறையில், உங்கள் சீட்டுத் தொகையிலிருந்து கிடைக்கும் லாபத்தைப் பெருக்கிக்கொண்டு, அதிகபட்ச லாபத்தைப் பெற முடிகிறது.

எவ்வளவு சுலபம் பாருங்கள்! மேலும், பயனுள்ளதும் கூட. திருமணச் செலவுக்குப் பணம் வேண்டுமா? நவீன வாழ்க்கைக்குத் தேவையான பொருட்கள் வாங்க வேண்டுமா? குழந்தைகளின் கல்வியா? வியாபாரத்தில் முதலீடு செய்ய வேண்டுமா? இன்றே ஸ்ரீராம் சீட்டுக் கம்பெனியில் சந்தாதாரராகச் சேருங்கள்; நிம்மதியாக இருங்கள்.

## ஸ்ரீராமில் சேரத் தூண்டுவது எது?

ஸ்ரீராம் சிட்ஸ் அண்ட் இன்வெஸ்ட்மென்ட்ஸ் பிரைவேட் லிமிடெட், கூட்டுரிமை (Corporate) சீட்டு நிறுவனங்களில் மிகப் பெரியதாகும். 15 ஆண்டு காலமாக நம்பிக்கையின் சின்னமாக விளங்கும் பெயர் அது. ஆனால், ஸ்ரீராமின் செயல்வேகத் திறனைக் கருதும்போது, அது அவ்வளவு வியப்பை அளிக்காது. உதாரணமாக, ஆண்டுக்கு 80 கோடி ரூபாய் விநியோகிப்பதன் மூலம் பிரதிபலிக்கிறது. பணத்தைத் தாமதமின்றி பகிர்ந்தளிக்கும் திறன்; சந்தாத் தொகையை மிகுந்த திறமையுடன் வசூலிக்கும் சாமர்த்தியம்; அல்லது சந்தாதாரரின் பணம் திருப்பும் திறனை மதிப்பிடும் லாவகம். மேலும், நீதி நெறிப்படி, உங்களுக்கு ஒவ்வொரு கட்டத்திலும் ஆலோசனை கூற, தொழில் முறையில் பயிற்சி பெற்ற ஏஜெண்டுகளை நியமித்திருப்பது.




ஆம் : சமூகக் குறிக்கோள்களை மேன்மையாக ஏற்று ஸ்ரீராம் தனி இடத்தைப் பெற்றுள்ளது. எனவே, ஸ்ரீராமின் அர்ப்பணிக்கப்பட்ட சேவையின் உதவியால், உங்கள் வருங்காலத்துக்காகத் திட்டமிடுவது மிகவும் எளிது.

**ஸ்ரீராம்** சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிமிடெட்.

**இந்தியாவின் நெ.1 சீட்டுக் கம்பெனி**

நிர்வாக அலுவலகம் : சுப்ரமணியம் பில்டிங், 1, கிளப் ஹவுஸ் சாலை, சென்னை-600 002. தொ.பே. 473932/475536/470400/474451

# ஒன்று இறப்பு விழா

## 22

அந்தக் கவரை கமிஷனர் ஹில்லிடம் காட்டினான் விவேக். "ஸார்! இந்தக் கவர்ல ஓர் அற்புதமான தடயம் மாட்டியிருக்கு."

"விவேக்! நீங்க என்ன சொல்றீங்க...?" ஹில் கவரை வாங்கிக் கொண்டே கேட்டார்.

"கவரோட இடது பக்க மூலையைப் பாருங்க ஸார்."

கமிஷனர் கவரின் இடது பக்க மூலையைப் பார்த்து விட்டு நெற்றியைச் சுருக்கி உதட்டைப் பிதுக்கினார்.

"ஐ டு நாட் ஃபைண்ட் எனிதிங்க்..."

"யூ... கேன் ஸி... ஸார்" – சொன்னவன் கவரின் இடது பக்க மூலையை ஒரு பால் பாயிண்ட் பேனாவால் ரவுண்ட் பண்ணினான். "இப்ப பாருங்க ஸார்.."

ஹில் பார்த்தார். பிடிபட்டது. கொஞ்சம் அழுக்காய் – புடைப்பாய் அந்த இடம் மட்டும் வித்தியாசமாய்த் தெரிந்தது. "விவேக்! என்ன இது...?"

"இந்தக் கவரை ஒட்டினவனோட கட்டை விரல் இம்ப்ரஷன் ஸார்... இது! கவரோட வாயை 'கம்'ல ஒட்டும் போது 'கம்' படிஞ்ச.. கட்டை விரலை... தன்னையறியாமல் இடது பக்க மூலையில வெச்சு பிரஸ் பண்ணியிருக்கான். இந்த இம்ப்ரஷனைப் பார்த்தீங்களா...? லேசா பிசுபிசுப்பா ஒரு ஈரம் தெரியுது. ஸோ... கவர் இந்த ஏர்போர்ட்டிலேயே ஒரு பத்து நிமிஷத்துக்குள்ளே ஒட்டப்பட்டு டாய்லெட் நிலைக் கண்ணாடிக்கு வந்திருக்கணும்."

கமிஷனர் ஹில் பிரமிப்பாய் விவேக்கைப் பார்த்தார். அதே பிரமிப்போடு கேட்டார்.

"இந்தக் கவரை வெச்ச ஆசாமி ஏர்–போர்ட்டுக்குள்ளேதான் இருக்கான்னு சொல்ல வர்றீங்களா விவேக்...?"

"சர்ட்டன்லி! அதுவும், ஏர்போர்ட்டில் வேலை செய்கிற ஆசாமிகளில் யாராவது இருக்கலாம்."

கமிஷனர் பரபரத்தார்.

"நம்முடைய நெக்ஸ்ட் மூவ் என்ன?"

"ஃபாரன்ஸிக் நிபுணர்கள் ரெண்டு பேரை உடனடியா வரவழைக்கணும்."

"தென்...?"

"கவரை ஒட்டுவதற்காக உபயோகப்பட்ட 'கம்' ஏர்போர்ட்டின் எந்த செக்ஷனிலாவது இருக்கலாம். அந்த செக்ஷன் இன் சார்ஜ் யார் என்பதைப் பார்க்க வேண்டும்."

"பார்த்து விடலாம். நோ... பிராப்ளம்" ஹில் சந்தோஷமானார்.

"இந்த நடவடிக்கைகள் ரகசியமாக இருக்க வேண்டும். எந்த போலீஸ் அதிகாரிக்கும் இதைச் செய்யச் சொல்லி உத்தரவு கொடுக்காதீங்க... நாம் இப்போது இந்தியக் கழுகுகளுக்கு வெகு சமீபத்தில் இருக்கிறோம் ஸார். யாரையும் சுலபத்தில் நம்பி விட முடியாது."

"வாட் அபௌட் பைலட் அலெக்ஸாண்டர்...? அவர் இந்த ஏர்போர்ட்டுக்கு நிரம்பவும் பரிச்சயமானவர். நாம் எடுக்கப் போகும் நடவடிக்கைகளுக்கு அவரைப் பயன்படுத்திக் கொள்ளலாமே...?"

"யூ ஆர் கரெக்ட் ஸார்."

கண்ட்ரோல் ரூமின் கண்ணாடிச் சதுரங்களுக்கு மத்தியில் அலெக்ஸாண்டரை வரவழைத்துப் பேசினார்கள் விவேக்கும் ஹில்லும்.

அலெக்ஸாண்டர் நெற்றியை ஆட்காட்டி விரலால் கீறிக் கொண்டே மேல் பார்வை பார்த்தார். "இந்தக் கவர் ஸ்டோர்ஸ் செக்ஷனில் ஒட்டப்பட்டிருக்கலாம் ஸார். ஸ்டோர்ஸ் செக்ஷன் மட்டும் மூன்று ஷிப்ட்டும் உயிரோடு இருக்கும். ஒரு ஷிப்ட்டுக்கு மூன்று பேர் வேலைக்கு வருவார்கள்."

"இந்த ஷிப்ட்டில் யார் யார் இருக்கிறார்கள்?"

"என்கொய்ரியில் கேட்கட்டுமா...?"

"வேண்டாம்... உஷாராகி விடுவார்கள்."

"பின் எப்படி அவர்களை நெருங்குவது...?"

"ஸ்டோர்ஸுக்கு நீங்களும் நானும் நேரிடையாகவே போகலாம். அவர்களை நாம் விசாரித்துக் கொண்டிருக்கும் போதே – ஃபாரன்ஸிக் நிபுணர்கள் வந்து விடுவார்கள். அந்தக் கவரில் சிக்கியிருக்கிற கட்டை விரல் ரேகை யாருடைய விரலுக்கு ஒத்துப் போகிறதோ... அந்த நபரை மடக்கி விடலாம்."

சொல்லிக் கொண்டே விவேக் எழுந்தான்.

கமிஷனர் ஹில் சொன்னார். "மிஸ்டர் விவேக்! நீங்க ஸ்டோர்ஸ் செக்ஷனிலிருந்து விசாரணையை ஆரம்பிங்க. நான் மத்த செக்ஷன்களை ஃபார்மலா என்கொயர் பண்ற மாதிரி பாவ்லா பண்ணிட்டு வர்

ராஜேஷ்குமார்

றேன்.''

மூன்று பேரும் கண்ட்ரோல் ரூமை விட்டு வெளியே வந்தார்கள். ஒரில் மெயின்டனென்ஸ் செக்ஷனை நோக்கிப் போக, விவேக்கும் அலெக்ஸாண்டரும் ஸ்டோர்ஸ் செக்ஷனைப் பார்த்து நடந்தார்கள்.

ஏர்போர்ட்டின் ஸ்டோர்ஸ் செக்ஷன் கொஞ்சம் ஒதுங்கி, சோகையான ட்யூப் லைட் வெளிச்சத்தில் தெரிந்தது. வெளியே இருந்த சிமெண்ட் தரைப் பரப்பில் விமானங்களின் குடல் பாகங்கள் இறைந்திருந்தன. காற்றில் லேசாய் ஆயிலும் பெட்ரோலும் மணத்தன.

ரன்வேயில் வெடித்துச் சிதறியிருந்த விமானத்தை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த அந்த இரண்டு பேர் விவேக்கையும் அலெக்ஸாண்டரையும் கண்களில் வாங்கியதும் லேசாய் முகம் மாறினார்கள்.

விவேக் அவர்களை நெருங்கினான். மெல்லிய ஆங்கிலத்தில் கேட்டான்.

''ஸ்டோர்ஸ் இன்சார்ஜ் யாரு...?''

''மை செல்ஃப்.''

''உங்க நேம்...?''

''ஸ்டீபன்.''

''இவர்...?''

''என்னோட அஸிஸ்டண்ட். மிஸ்டர் ரஞ்சித் கோட்டே.''

''இந்த ஷிப்ட்டுக்கு மொத்தம் மூன்று பேர்தானே...?''

''ஆமா.''

''இன்னொருத்தர் எங்கே...?''

''உள்ளே இருக்கிறார். அவரும் அஸிஸ்டெண்ட்தான். நேம் சுபாஷ்! அந்த விபத்து சம்பந்தமாய் எங்களை விசாரிக்க விரும்புகிறீர்களா?''

''ஆமாம்.''

''ப்ளீஸ்... கம்...''

ஸ்டீபன் அவர்களை உள்ளே அழைத்துக் கொண்டு போய் மேஜைக்குப் பக்கமாய்ப் போட்டிருந்த வினைல் நாற்காலிகளைக் காட்டினார்.

''உட்காருங்க ஸார்.''

உட்கார்ந்தார்கள்.

''ஹி... ஈஸ் சுபாஷ்.'' ஓர் அலமாரியில் அட்டைப் பெட்டிகளை அடுக்கிக் கொண்டிருந்த இளைஞனைச் சுட்டிக் காட்ட — அந்த இளைஞன் பார்த்துக் கொண்டிருந்த வேலையைப் பாதியிலேயே விட்டு விட்டு அவர்களை நோக்கி வந்தான்.

விவேக் மூன்று பேர்களையும் பொதுவாய் ஒரு பார்வை பார்த்துக் கொண்டு பேசினான். ''நடந்த சம்பவம் உங்களுக்குத் தெரியும். ஒரு விமானம் சாதாரணமான காரணங்களினால் விபத்துக்குள்ளாவதில்லை. அந்த விபத்துக்குப் பின்னாடி மறைமுகமான சதி வேலைகளும் இருக்கும். கொஞ்ச நேரத்துக்கு முந்தி நடந்த இந்த விமான விபத்துக்குப் பின்னாலேயும் சில சதி வேலைகள் நடந்திருக்கு. அந்த சதி வேலைக்கு விமான நிலையத்தைச் சேர்ந்த



ஊழியர்களே கூட காரணமாக இருக்கலாம். இந்த விபத்து சம்பந்தமா போலீஸ் டிபார்ட்மெண்ட்டைச் சேர்ந்த நாங்க சில நடவடிக்கைகளை எடுக்கத் தீர்மானம் பண்ணியிருக்கோம்.''

மூன்று பேரும் விவேக்கையே பார்த்துக் கொண்டிருக்க அவன் தொடர்ந்தான்.

''இந்த ஏர்போர்ட்டின் ஒவ்வொரு செக்ஷனிலும் வேலை பார்க்கிற ஸ்டாஃப்போட பயோ டேட்டாவைச் சேகரம் பண்ணி, ஒரு தீவிர விசாரணையை நடத்தப் போறோம். ஸ்டோர்ஸ் செக்ஷனைச் சேர்ந்த நீங்க மூணு பேரும் உங்க பயோ டேட்டாக்களை எழுதி,

# விடுமுறையில் புதிய அனுபவம்



சென்ற விடுமுறையின் போது 'நீச்சல் பழகுவேன்' அல்லது 'ஸ்கூட்டர் ஓட்டக் கற்றுக் கொள்வேன்' என்று நீங்கள் ஒரு முடிவு எடுத்திருக்கலாம். ஆற்றில் அல்லது அருவியில் முதன் முதலாகக் குளித்திருக்கலாம். புதியதோர் ஊருக்குச் சென்றிருக்கலாம். அங்கு புதியதொரு சுவாரஸ்யமான மனிதரைச் சந்தித்திருக்கலாம். புதியதொரு விளையாட்டு, தேகப் பயிற்சி அல்லது பொழுது போக்கைப் பயின்றிருக்கலாம். இப்படி ஏதோ ஒரு புதிய அனுபவம் விடுமுறையில் உங்களுக்குக் கிடைத்திருந்தால், அதைப் பிறர் படித்து ரசிக்கும்படி அல்லது சிரிக்கும்படி கல்கியில் 25 வரிகளுக்கு மேற்படாமல் எழுதுங்கள். உறை மீது, "விடுமுறையில் புதிய அனுபவம்" என்று குறிப்பிட்டு ஏப்ரல் 10 தேதிக்குள் எங்களுக்குக் கிடைக்கும்படி அனுப்புங்கள். ஏற்கப் படாதவற்றைத் திருப்பி அனுப்ப இயலாது. விடுமுறை மலரில் பிரசுரமானால் பரிசு ரூ. 25. அதுதவிர அன்பளிப்பாகக் கிடைப்பது:

**கல்கி விடுமுறை மலர் 1989**

அதோடு உங்க இரண்டு கைகளோட ஃபிங்கர் பிரிண்ட்ஸையும் ஒரு பேப்பர்ல பதிச்சுக் கொடுக்கணும்."

மூன்று பேரும் ஒருத்தரையொருத்தர் பார்த்துக் கொண்டார்கள். விவேக் அவர்களைப் பார்த்துப் புன்னகை செய்தான்.

"ப்ளீஸ்..."

அவர்கள் பேப்பர்களை எடுத்து வைத்துக் கொண்டு எழுத ஆரம்பிக்க, விவேக் எழுந்து அந்த ஸ்டோர்ஸைச் சுற்றி வந்தான். நீளமான அந்த ஹாலைச் சுற்றிக் கொண்டு வலது சுவரோரமாய் வந்த போது, சில இடிபாடான இயந்திரச் சாமான்களுக்கு மத்தியில் அந்த போர்ட்டபிள் டைப் ரைட்டிங் மெஷின் குப்புறக் கிடந்தது. சில விநாடிகள் செலவழித்து அதை உற்றுப் பார்த்த விவேக், அலெக்ஸாண்டரிடம் வந்தான். அவர் கையில் பேப்பர்களை வைத்துக் கொண்டிருந்தார்.

"என்ன காப்டன்...? பயோடேட்டாக்களை கலெக்ட் பண்ணிட்டீங்களா?"

"பண்ணிட்டேன் ஸார்..."

"ஃபிங்கர் பிரிண்ட்ஸ்?"

"ஸ்டாம்ப் பேட்ல பதிச்சு வாங்கிட்டேன்."

"குட்... அந்த 'கம்' பாட்டிலையும் எடுத்துக்குங்க."

அலெக்ஸாண்டர் எடுத்துக் கொண்டார். வெளியே வந்தார்கள்.

இரவு மணி இரண்டு. கண்ட்ரோல் ரூம். மெலிதான குழல் விளக்கு வெளிச்சம். விவேக், கமிஷனர் ஹரில், கண்ட்ரோல் ஆபீஸர் அய்யங்கார், ஃபாரன்ஸிக் துறையிலிருந்து வந்திருந்த ஆபீஸர் பிராக்ஜி, அந்த ஓவல் ஷேப் மேஜையைச் சுற்றிலும் உட்கார்ந்திருந்தார்கள். மேஜையின் மேல் ஃபிங்கர் பிரிண்ட்ஸ் பதித்த இருபதுக்கும் மேற்பட்ட தாள்கள் படபடத்தன. அதன் பக்கத்தில் போர்ட்டபிள் டைப்ரைட்டிங் மெஷின்.

பிராக்ஜி சொல்லிக் கொண்டிருந்தார். "கவரின் மேல் கிடைத்த 'கம்' இம்ப்ரஷன் ஓர் இடது கையோட கட்டை விரலுக்குச் சொந்தமானது. அதே போல் கவரை ஒட்டுவதற்காக உபயோகப்படுத்தப்பட்ட 'கம்'மும் ஸ்டோர்ஸ் ரூமிலிருந்து கொண்டு வரப்பட்ட 'கம்'மும் ஒரே இனம். இனி நாம் பார்க்க வேண்டியது கம்பேரிசன்தான். ஃபிங்கர் பிரிண்ட்ஸ் உடையாமே கிடைச்சிருக்கிறது ஒரு ப்ளஸ் பாயிண்ட்."

சொன்னவர் கம்பேரிசனை ஆரம்பித்தார்.

ஏறக்குறைய அரை மணி நேரம்.

நிமிர்ந்தார்.

"மிஸ்டர் விவேக்! ஏர்போர்ட்டைச் சேர்ந்த எந்த ஸ்டாஃப்பும் வெளியே போகவில்லையே...?"

"யாரும் போக முடியாது மிஸ்டர் பிராக்ஜி...! அந்தந்த செக்ஷனுக்கு முன்னால் செக்யூரிடி கார்ட்ஸ் ஆணி அடித்தது

மாதிரி நின்று கொண்டிருக்கிறார்கள்.''

''குட்! நீங்கள் ஸ்டோர் செக்ஷனைச் சேர்ந்த சுபாஷைக் கைது செய்யலாம். கவரின் மேலிருந்த தம்ப் இம்ப்ரஷன் சுபாஷுடைய விரல் ரேகையோடு அற்புதமாய் ஒத்துப் போகிறது. அதே போல் அந்த போர்ட்டபிள் டைப்ரைட்டிங் மெஷினில் கிடைத்த ஃபிங்கர் பிரிண்ட்ஸும் ஒத்துப் போகிறது.''

''தாங்க் யூ மிஸ்டர் பிராக்ஜி...'' — சொன்ன விவேக் எழுந்தான். கமிஷனரிடம் திரும்பினான்.

''சுபாஷை ஸ்டோர் ரூமில் வைத்தே விசாரிக்கலாம் ஸார். அவனை வெளியே கொண்டு வந்தால் அவனுடைய உயிருக்கு ஆபத்து ஏற்படலாம். விடிவதற்குள் அவனிடம் விஷயங்களைச் சேகரிக்க வேண்டும்.''

விவேக்கும் ஹில்லும் ஒரு யுத்த கால அவசரத்தோடு வெளியே வந்தார்கள்.

ஸ்டோர்ஸ் செக்ஷனுக்குள் நுழைந்தார்கள் விவேக்கும், கமிஷனரும். ஸ்டீபனுக்கும் ரஞ்சித் கோட்டேவுக்கும் எதிரே உட்கார்ந்திருந்த சுபாஷ் சலனமில்லாமல் அவர்களைப் பார்த்தான். விவேக் அவனை நெருங்கித் தோள் மேல் கையை வைத்தான். எழுந்தான் அவன். முகத்தில் லேசாய் வியர்வை.

''இளம் இந்தியக் கழுகுக்கு என் வீர வணக்கம்.''

''ஸ...ஸார்'' — சுபாஷ் குளறினான்.

''கவரை ஒட்டும் போது — கையில் பசை படாமே ஒட்டணும். அப்படியே பசை பட்டுட்டாலும் அதே கையோடு கவரைத் தொடக் கூடாது. தொட்டா கட்டை விரலோட இம்ப்ரஷன் படும். இந்த முன் ஜாக்கிரதை விஷயங்களையெல்லாம் உன்னோட இயக்கத்துல சொல்லித் தர்றதில்லையா சுபாஷ்...?''

''ஸ..ஸார்'' எச்சில் விழுங்கினான்.

விவேக் சிரித்தான் —

''அதே மாதிரிதான் டைப்ரைட்டிங் மெஷின். தூசி படிஞ்ச மத்த எந்திர சாமான்களுக்கு மத்தியில் தூசி படாத ஒரு டைப்ரைட்டிங் மெஷின். ஸ்டோர்ஸ் 'ரெக்கார்ட்' — இல் அது வேண்டாமென்று ஒதுக்கப்பட்டது. ஆனா நீ அதைச் சரி பண்ணி, எனக்கு வார்னிங் நோட்டீஸ் டைப் பண்ணியிருக்கே.''

சுபாஷ் அதிர்ந்து போய் விவேக்கைப் பார்க்க — விவேக் புன்னகை செய்தான்.

''உங்க காட்ல பெய்ஞ்சிட்டிருந்த மழை ஓய்ஞ்சடுச்சு. போன ஒரு மணி நேரமா எங்க காட்ல மழை. கழுகுகளோட கூடாரம் எங்கேயிருக்குன்னு சொல்றியா?''

''தெரியாது..'' சுபாஷ் பயத்தை உதறியிருந்தான்.

''இதே வார்த்தையை நீ ரொம்ப நேரத்திற்குச் சொல்லிட்டிருக்க முடியாது. சுபாஷ்! உண்மையை நீ சொன்னா இந்த அரசாங்கம் உனக்குப் பரிவு காட்டும். உனக்குத் தண்டனை கிடையாது. உத்யோகம் பறிபோகாது. யூ வில் பி ரிவார்டட்.''

''நி... நி... நிஜமாவா...?''

''போலீஸ் பொய் சொல்லாது.''

''நான் உண்மையைச் சொல்லிட்டா எனக்கு எந்த தண்டனையும் கிடையாதா?''

''கிடையாது.''

''நம்பலாமா...?''

''பம்பாய் கமிஷனர் பக்கத்திலேயே இருக்கார். சூடம் ஏத்திச் சத்தியம் பண்ணித் தரச் சொல்லட்டுமா...?''

பெருமூச்சு விட்டுத் தோள்களைக் குலுக்கிக் கொண்டான் சுபாஷ். ''எனக்கு எந்தத் தண்டனையும் கிடைக்காது என்கிற நம்பிக்கையில் உங்ககிட்டே எல்லாத்தையும் சொல்றேன். சொல்றதுக்கு முந்தி ஒரு டம்ளர் தண்ணீர் கொடுங்கள். தாகமாயிருக்கிறது...''

''தரச் சொல்றேன்'' — சொன்ன விவேக் செக்யூரிடி கார்ட்டை நோக்கித் திரும்பிய அதே விநாடி —

சுபாஷ் தன் கழுத்தில் கட்டியிருந்த அந்த மெல்லிய கறுப்புக் கயிற்றைப் பட்டென்று அறுத்தான்.

கயிற்றின் நுனியில் சயனைட் குப்பி... வேகமாய் ஆடியது.

விவேக் சுதாரித்து — அவன் கையைத் தட்டுவதற்குள் சயனைட் குப்பி சுபாஷின் வாய்க்குள் அஸ்தமனமானது.

(தொடரும்)

---

அமெரிக்காவில் பணியிலிருந்து ஓய்வு பெற்றவர்கள் ''மாடர்ன் மெட்யூரிட்டி'' என்ற பத்திரிகையை வெளியிடுகிறார்கள். அமெரிக்காவில் மூன்றாவது பெரிய பத்திரிகையாக விளங்கும் இதில் ஓய்வு பெற்றவர்கள் தங்களது அனுபவங்களையும், அவர்கள் பணிபுரிந்த போது ஏற்பட்ட இன்னல்களையும் அவற்றைச் சமாளித்து வெற்றியடைந்த நிகழ்ச்சிகளையும் எழுதுகிறார்கள்.

ஆதாரம்: ட்ரக்கர் எழுதிய நூல்.
தகவல்: எம். கே. நாராயணன்.



நிருபர்: அரசியல் ரீதியாக உங்களின் இன்றைய நிலை என்ன?

டி. ராஜேந்தர்: இன்று நான் தனியாய் நிற்கிறேன். என்னுடைய வளர்ச்சி தி. மு. க.வில் சிலருக்குப் பிடிக்கவில்லை. அதனால் நான் அவமானப்படுத்தப்பட்டேன்; ஏமாற்றப்பட்டேன்; கோமாளியாக ஆக்கப்பட்டேன்; ஏமாளியாக ஆக்கப்பட்டேன். நம்பிக்கைத் துரோகம் செய்யப்பட்டேன்; கேவலப்படுத்தப்பட்டேன்; மனோதத்துவ ரீதியாய்ச் சித்திரவதை செய்யப்பட்டேன்; அதை என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை; நான் என் ஆதங்கத்தை வெளிப்படுத்தினேன்; அது சிலருக்குப் பிடிக்கவில்லை. அதுதான் எனது இன்றைய நிலைமையின் பின்னணி.

நிரு: அப்படியென்றால் நீங்கள் தி. மு. க.விலிருந்து விலகியதற்குத் தேர்தலில் டிக்கெட் தரப்படாதது மட்டுமே காரணமில்லையா?

டி. ஆர்.: டிக்கெட் வேண்டுமா என்று கடைசி நேரத்தில் கூடக் கேட்டார்கள். எனக்கு டிக்கெட்தான் குறி என்றால் எப்படியும் என்னால் அதைப் பெற்றிருக்க முடியும். நான் அந்த மாதிரி ஆளில்லை; நேரிடையாய்த் தேர்தலில் சீட் ஒதுக்கீடு கேட்டுப் போகாததுதான் பிரச்னை. சீட்டு கேட்டுச் சென்ற என் ரசிகர்களை அவமானப்படுத்தியவர்கள், அதுபற்றி என்னிடம் வாய் திறக்கவே இல்லை. அது எனக்கு வருத்தமளித்தது. 'வாழ்க' கோஷம் போட மட்டும்தான் டி. ராஜேந்தரின் ரசிகர்கள் வேண்டும்! தேர்தல் சீட்டுக் கேட்டால், அவமானப்படுத்துவது என்ன நியாயம்?

நிரு: சொந்தக் காரணங்களுக்காக நீங்கள் எம். ஜி. ஆரை எதிர்க்க நேர்ந்த போது, உங்களுடைய பாதுகாப்புக்கு ஒரு கேடயமாய் இருக்குமென்றுதானே நீங்கள் தி. மு. க.வில் சேர்ந்தீர்கள்?

டி. ஆர்.: அன்றைக்குப் பாதுகாப்புக்காக, தி. மு. க. வில் சேர்ந்தேன் என்றால், தி. மு. க. வை விட்டு வெளியேறிய இன்று என்ன பாதுகாப்பு இருக்கிறது, எனக்கு? இதிலே என்ன சுயநலத்தை நீங்கள் காண்கிறீர்கள்? அத்தனை பேரும் இன்று ஜால்ரா தட்டும் போது, எதிர்த்து நிற்கும் துணிச்சல், டி. ராஜேந்தருக்கு மட்டும்தானே இருக்கிறது?

நிரு: நீங்கள் என்ன சொன்னாலும், உங்கள் வளர்ச்சியில் தி. மு. கழகத்துக்குப் பங்கு உண்டு இல்லையா?

டி. ஆர்.: இதை நான் ஒப்புக்கொள்ளவே மாட்டேன். ஒரு கட்சியினால், சினிமாத் துறையிலுள்ளவர்கள் வளர்ச்சியடையலாம் என்றால், அத்தனை கட்சிக் காரர்களும், சினிமாத் துறையில் நுழைந்து விட வேண்டியதுதானே? தி. மு. க. காரர்கள் அத்தனை பேரும் நடிக்க வந்து விடட்டும். எம். எல். ஏக்கள் டைரக்ட் செய்யட்டும். நிற்க முடியுமா, நிலைத்து என்று பார்த்து விடுவோம்! கட்சியினால் ஒரு நடிகனையோ, டைரக்டரையோ உருவாக்கிவிட முடியாது. வேண்டுமானால் ஒரு கட்சி சூப்பர் ஸ்டாரையோ, சூப்பர் டைரக்டரையோ சொந்தம் கொண்டாடிக் கொள்ளலாம்.

நிரு: உங்கள் வளர்ச்சி, ஸ்டாலினுக்குத் தடையாய் இருக்கும் என்கிற கருத்து சரியானதா?



# "அரசியலில் வென்று காட்டுவேன்!"

—டி. ராஜேந்தர் ஆவேசம்



...விடுதலைப் புலியைப் போல் சயனைட் சாப்பிட்டாலும் சாப்பிடுவேனேயொழிய, தன்மானத்தை விட்டுச் சரணாகதி அடையமாட்டேன்.





"...அத்தனை பேரும் இன்று ஜால்ரா தட்டும் போது, எதிர்த்து நிற்கும் துணிச்சல், டி. ராஜேந்தருக்கு மட்டும் தானே இருக்கிறது?"

டி. ஆர்.: நானும் அப்படித்தான் கருதுகிறேன்.

திரு: நீங்கள் உங்களை ஒரு கம்யூனிஸ்ட் என்றும் சொல்லிக் கொள்ளுகிறீர்களே!

டி. ஆர்.: இப்போதும் கூட நான் கம்யூனிசத்தில் ஈடுபாடு உள்ளவன்தான். ஆனால் முழுமையான கம்யூனிஸ்ட்டாக என்னை முத்திரை குத்திக்கொள்ள நான் விரும்பவில்லை. ஓரளவு தளர்த்தப்பட்ட கம்யூனிசக் கொள்கைகள் கொண்டது தி. மு. க. என நான் கருதியதால்தான் தி. மு. க. வில் சேர்ந்தேன். அதற்குக் கூட ஒரு சந்தர்ப்பச் சூழ்நிலை காரணமாய் அமைந்தது. ஓர் அண்ணா தி. மு. க. எம். எல். ஏ. — தன் சொந்த லாபத்துக்காக, எம். ஜி. ஆரிடம் என்னைப் பற்றிப் புகார் கூறிய போது, 'டி. ராஜேந்தர் ஒரு தி. மு. க. காரன்' என்று குறிப்பிட்டார். எம். ஜி. ஆர். என்னிடம், "நீ தி. மு. க. வா? தி. மு. க. வா?" என்று திரும்பத் திரும்பக் கேட்டார். நானும், "ஆமாம்! நான் தி. மு. க தான்" என்று சொன்னேன். அதற்கும் தைரியம் வேண்டுமல்லவா?

திரு: உங்களின் அடுத்த திட்டம் என்ன?

டி. ஆர்.: எனக்கு இதுவரை சினிமாக் கனவுகள் மட்டுமே இருந்தன. இப்போது என் கனவுகளுக்குப் புதிய வண்ணம் ஏற்பட்டுள்ளது. நான் செல்லும் பாதையில், என்னை யாராவது சீண்டி விட்டால் — தடுக்கி விட்டால்— அவமானப்படுத்தினால், அதன்பின் எழுந்து நிற்க வேண்டும்; நிமிர்ந்து நிற்க வேண்டும் என்பது என் கொள்கை. எனவே நான் அரசியலில் நின்று காட்டுவேன்; வென்று காட்டுவேன். இது தான் என் திட்டம்.

திரு: அப்படியெனில் நீங்களும் புதுக் கட்சி ஆரம்பிக்கப் போகிறீர்களா?

டி. ஆர்.: அரசியல் என்றவுடன், ஏன் கட்சி என்று நினைக்கிறீர்கள்? நான் ஒரு பேச்சாளன்; எழுத்தாளன்; சினிமா டைரக்டர்; இப்போதைக்குக் கட்சி என்று ஓர் அமைப்பு எனக்கு அவசியமில்லை. பரபரப்பாக மட்டுமில்லை, ஆணித்தரமாக, ஆதாரத்துடன், புள்ளி விவரங்களுடன், படித்தவன் — (இரட்டை எம். ஏ. பட்டம்) என்கிற முறையில், சட்டசபையில் ஆளும் கட்சியைத் தட்டிக் கேட்க, கேள்வி கேட்டு மடக்க, என்னால் முடியும். ஆட்சியைப் பிடிப்பதில் எனக்கு ஆசையில்லை. ஆனாலும், தயாரிப்பிலிருக்கும் என் படம் ரிலீஸ் ஆனதும், எங்கே இடைத்தேர்தல் வந்தாலும் நான் கண்டிப்பாய்ப் போட்டியிடுவேன். மக்களிடம், "எனக்குக் கெட்ட பழக்கம் ஏதும் இடையாது; லஞ்சம் வாங்க வேண்டிய அவசியமில்லை; ஊழல் செய்ய மாட்டேன்.



உங்கள் குரலைச் சட்டசபையில் பிரதிபலிப்பேன்'' என்று சொல்வேன். வெற்றி பெற்றால் சட்டசபைக்குப் போவேன். தோற்றாலும் கவலைப்பட மாட்டேன்; எனக்குக் கையிலே சினிமாத் தொழில் இருக்கிறது. அவசியமானால் கட்சி ஆரம்பிக்கவும் தயங்க மாட்டேன்.

நிரு: நீங்கள், கட்சியிலிருந்து வெளியேறிய போது, தனியாய்த்தானே வரவேண்டியிருந்தது. உங்களை ஆதரித்து, தி. மு. க. வினர் உங்கள் பின்னால் வரவில்லையே! இது உங்களுக்குக் கட்சியில் பெரிய செல்வாக்கு இல்லாததால்தானே!

டி. ஆர்.: நான், தி. மு. க. வில் இருந்த போது, கலைஞரை முழுமையாய் நம்பினேன்; கட்சியில் கோஷ்டி சேர்ப்பது கலைஞருக்குச் செய்யும் துரோகம் என நினைத்தேன். அதனால்தான் தி. மு. க. வில் பல கோஷ்டியினரும், என்னை அணுகிய போது, நான் எவரையும் ஆதரிக்காமல், கலைஞருக்கு உண்மையானவனாய் இருந்தேன். கலைஞரிடம் எதையும் எதிர்பார்க்காமல் முழுமையான அன்பு செலுத்தினேன். அவரும் அப்படியே திரும்ப அன்பு காட்டுவார் என எதிர்பார்த்தேன். அந்த விஷயத்தில் நான் தோற்றுப் போய் விட்டேன்.

நிரு: தி. மு. கழகத்தில் சேர மறுபடியும் அழைப்பு வந்தால் ஏற்றுக் கொள்வீர்களா?

டி. ஆர்.: தி. மு. கழகத்தின் அதிகாரத்துக்கு நான் பணிய மாட்டேன். அன்புக்குக் கட்டுப்படுவேன். ஆனால், ஜால்ராக்கள் சுற்றியிருக்கும் இன்றைய தி. மு. க. வின் கண்களுக்கு நான் அவுட் ஆஃப் ஃபோகஸில் இருக்கிறேன். அங்கிருந்து வரும் அழைப்பை அன்பு அழைப்பாய் என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது. நான் விடுதலைப் புலி போல, சயனைட் சாப்பிட்டாலும் சாப்பிடுவேனேயொழிய, தன்மானத்தை விட்டுச் சரணாகதி அடைய மாட்டேன்.

பேட்டி: எஸ். சந்திரமௌலி.



# 'விழிகள் நனையச் செய்தார் வித்யாகர்!'

* 'அன்பின் வழியில் யார் நடந்தாலும் அவனும் ராமனும் ஒன்றே. அழுபவர் கண்களை யார் துடைத்தாலும் அவனும் ராமனும் ஒன்றே. மற்றவர்க்கெல்லாம் நல்வழி காட்டும் மனிதனும் ராமனும் ஒன்றே' என்ற பாடல் வரிகளே நெஞ்சில் பனிச்சிட்டு நெஞ்சமெலாம் நிறைந்து நின்றது! வாழ்க வித்யாகரும், 'உதவும் கரங்களு'ம்.

சிதம்பரம். தங்க. குஞ்சிதபாதம்.

* திருச்சி மலைக்கோட்டை கோவிலில் மட்டும் 'தாயுமானவன்' இல்லை... அவன் மானுட வடிவிலும் வாழ்கிறான் என்று காட்டியது 'ஆண் வடிவத்தில் ஓர் அன்னை' கட்டுரை. ஊர், பேர் அறியாத குழந்தைகளுக்கும், முதியவர்களுக்கும் அடைக்கலம் தந்து அவர்களின் பசியைத் தணிப்பதற்காக வீடு வீடாகச் சென்று யாசகம் கேட்கும் வித்யாகரை நினைக்கையில் விழிகள் ஈரமாகின்றன.

திருக்குவளை. வெற்றிப்பேரொளி.

* நானும் சமூக சேவையில் ஈடுபாடு கொண்டு கிராமங்களில் இலவச மாலை நேர வகுப்புகளை நடத்தி வருகிறேன். தங்கள் பத்திரிகையில் வித்யாகரின் விலாசத்தை எழுதவில்லை. என்னைப் போன்ற சமூக சேவகர்கள் வித்யாகருக்கு உதவிட உடனே வித்யாகரின் முழு விலாசத்தை வெளியிட வேண்டுகிறேன்.

வேலூர். எஸ். சிவகுமார்.

* 'ஆண் வடிவத்தில் ஓர் அன்னை...' படித்து நெஞ்சம் நெகிழ்ந்தது. அட்டைப்படம் கண்ணில் நீர் வரவழைத்து விட்டது. வித்யாகர் அவர்களுக்கு மனமார்ந்த பாராட்டுக்களையும், நெஞ்சம் நெகிழ்ந்த நன்றியையும் தெரியப்படுத்துங்கள். அவரது முகவரியையும் தெரியப்படுத்துங்கள்.**

கடத்தூர். அருண்குமார்.

(** வித்யாகரின் உதவும் கரங்கள் முகவரியைக் கேட்டு கடிதங்கள் வந்து குவிந்தவண்ணம் உள்ளன. எனவே அதனைக் கீழே தருகிறோம்:

ஆசிரியர்.)

உதவும் கரங்கள்,
460, என். எஸ். கே. நகர்,
சென்னை — 600 106.

* எதற்கெடுத்தாலும் நாள், நட்சத்திரம் பார்ப்பவர்களுக்குச் சரியான சாட்டையடி 'நாளும் கோளும்' சிறுகதை.

திட்டக்குடி. அ. சரவணராசன்.

* அகஸ்தியனின் "தொச்சு போட்ட சோப்" சிறுகதை மிக அருமையான நகைச்சுவை. சிரிக்கச் சிரிக்க வயிற்றுக்குள் குடல்களில் சிக்கலே விழுந்து விட்டது!

மேட்டுப்பாளையம். மா. கணேசன்.

* மார்ச் 19—ம் தேதியிட்ட தலையங்கம் தலைப்பு தனிப்பட்ட அரசியல் கட்சியைப் பற்றியதாக இருப்பினும் நெடுநோக்கு கொண்டு எழுதப்பட்டிருந்தது. தேர்தல் முறையில் சில சீர்திருத்தங்கள் அமைந்தால் ஒழிய, அதற்காக நமது அரசியல் கட்சிகள் செலவிடும் தொகை நாட்டைப் பெரும் அபாயத்தை நோக்கியே நடத்திச் செல்லும் என்பதில் ஐயமில்லை.

புன்செய்ப்புளியம்பட்டி. ஆர். ரத்தினசாமி.

* ஊழல், ஊழல் என்று சும்மா வாய் கிழியக் கத்திக் கொண்டிருக்காமல் ஊழலின் அஸ்திவாரம் எங்கே இருக்கிறது என்பதைத் தலையங்கத்தில் சுட்டிக் காட்டியிருந்தது தங்களின் துல்லியமான பார்வையைப் படம் பிடித்துக் காட்டியது. தவறான தேர்தல் முறைகளைத் திருத்தி அமைத்தால் ஊழல் அரக்கன் தானாகவே மறைவான் என்ற தங்களின் வாதம் நியாயமானதே!

அரூர். மு. மதிவாணன்.

* அய்யா, சாமி....! ஜோக்குகளைக் கொஞ்சம் அதிகமாக வெளியிடுங்க...! 'கெக்கெக்கே'ன்னு சிரிக்க ரொம்ப நாளாச்சு!

வேதாரண்யம். செல்வி. வடுகன்.

* கட்டபொம்மன் மாவட்டத்தில் உள்ள கூடுதாழை கிராமத்தில் இருந்த மண் மேட்டைச் சரி செய்த பின்பு மக்கள் அனுபவிக்கும் மகிழ்ச்சி, மனத்துக்கு மிகவும் இதமாக இருக்கிறது. கல்கி கட்டுரை, உரியவர்களைத் தூண்டி நன்மை ஏற்பட வழி செய்திருக்கிறது என்பது கல்கிக்குக் கிடைத்த மாபெரும் வெற்றி!

சென்னை — 5. எஸ். வி. ராஜசேகர்.

* பெற்ற குழந்தை மிகுந்த சிரமத்துடன் பட்டம் பதவி பெற்றுப் பவனி வரும் போது பெற்றவர்களுக்கு ஏற்படும் அளவில்லா மகிழ்ச்சி போல், கூடுதாழை கிராம மாபெரும் மணல் மேடு குறையக் கல்கி எடுத்துக் கொண்ட முயற்சியினால் மணல் மேடு குறைந்து, மக்கள் மனம் நிறைந்து காட்சி அளிப்பதைப் பார்க்கும் போது, கல்கி இதழின் வாசகர்களாகிய எங்களுக்கும் மகிழ்ச்சி ஏற்பட்டது.

லால்குடி. எம். இராஜேந்திரன்.

* வாணியம்பாடி இஸ்லாமியாக் கல்லூரி கவிதைப் பூங்காவாக மணம் பரப்புவது அற்புதமான விஷயம்... சரஸ்வதி அழகாய்ப் பாடி மகிழும் ஊர் அல்லவா வாணியம்பாடி! (வாணி+அம்+பாடி) கவிஞர். அப்துல் ரகுமான் அவர்களுக்கும், இஸ்லாமியாக் கல்லூரி நிர்வாகத்தினருக்கும் உளங்கனிந்த பாராட்டுக்கள்.

ஈரோடு. சி. நாச்சிமுத்து.

நிறையத் தயங்கினான் வேணு.

அப்பா என்ன சொல்லப் போகிறாரோ?

அப்பா என்றால் சாதாரண அப்பா இல்லை! மிலிட்டரி அப்பா! அவர் ராணுவத்தில் வேலை பார்க்காமலேயே அதன் சட்டங்களையெல்லாம் அப்படியே கடைப் பிடிப்பவர்! ராணுவ அனுபவம் இருந்ததோ, அப்புறம் அனைவரின் பாடும் அதோகதி தான்!

அன்றையச் சமையலில் கொத்துமல்லித் தழை இருக்கலாமா கூடாதா என்பதைக் கூட அவர்தான் தீர்மானிக்க வேண்டும். டி.வி.யில் ஒலியும் ஒளியும் போடக் கூட அவரின் அனுமதி வேண்டும்.

அவர் வீட்டில் இருக்கிறார் என்றால் அனைவரும் 'கப், சிப்' என்று அடங்கிக் கிடப்பார்கள். அவர் குரல் மட்டுமே வெண்கலமணியின் நாதமெனக் கணீர், கணீர் என்று ஒலிக்கும்.

சிறகு முளைக்கப் பெற்ற வேணு, ரமணன், ஸந்த்யா முதலியோர் கூட முதல் தேதி என்றால் அப்படியே சம்பளப் பணத்தைக் கொண்டு போய் அப்பாவிடம் நீட்டி விடுவார்கள்.

அப்படி எதுவும் அவர் சட்டமாய்ப் போட்டிருக்கவில்லை. ஆனால் வகுக்கப் பெறாத சட்டமாய் அப்படித்தான் அங்கே நடைமுறைப்படுத்தப்பட்டு வருகிறது. இவர்களின் செலவுகளுக்கெல்லாம் அவர்தான் கணக்கிட்டுப் பணம் அளிப்பார்.

தாங்கள் சம்பாதிக்கிற பணத்தில் தங்களின் விருப்பம் போன்று எதையேனும் ஆசைப்பட்டு வாங்கிக் கொள்வதற்கு அவர்களால் இயலாது.

அவரிடம் கேட்கவும் பயம்; தயக்கம்!

ஒருவேளை துணிந்து கேட்டிருந்தால் கொடுத்திருப்பாரோ, என்னவோ?

அப்படிக் கேட்டுப் பார்த்தால் அல்லவா தெரியும்! கேட்டுப் பார்க்கவே துணிவில்லாத போது வேறே என்னதான் செய்வது?

இப்படியே ஓடி விட்டது.

இனிமேல் முடியாது போல் அல்லவா தெரிகிறது!

ஏனெனில், வேணுவுக்கு அவரிடம் போய் நின்று, நேருக்கு நேர் பேச வேண்டிய அவசியம் வந்து விட்டிருந்தது.

அப்பா அவனுக்காகப் பெண் பார்க்கும் படலத்தில் இறங்கியிருக்கிறாராம். அங்கே இங்கே என்று ஜாதகப் பரிவர்த்தனை பண்ணத் துவங்கியிருக்கிறாராம்!

முதலில் இதைத் தடுத்து நிறுத்தியாக வேண்டும்.

வேணுவின் மனம் முழுதும் ரம்யா என்கிற ரம்யம் நிறைந்து வழிவதை அவரிடம் சொல்லியாக வேண்டும்.

இது வரையிலும் எதிரில் போய் நிற்கவே அஞ்சியது போன்று, இப்போதும் அஞ்சி நின்றால், தனது கனவு வடிவம் பெறாமலேயே போய் விடும் என்று பயத்துடன் யோசனை பண்ணலானான்.

ரம்யாவை மறக்க முடியுமா?

முடியாது என்று அழுத்திச் சொன்னது அவன் மனம்.

அப்படியானால் அந்தச் சிம்மத்தின் முன்னே போய் மனத்தில் வலுவைச் சேர்த்தபடி நின்று கொண்டு, ரம்யாவைப் பற்றிச் சொல்லி விட வேண்டியதுதான்.

சொன்னதும் என்ன நடக்கும்?

சிம்மம் உறுமும்.

அந்த உறுமலில் வீடே கிடுகிடுத்துப் போய்விடும். அவரவரும் அஞ்சி ஒடுங்கி நிற்பார்கள். தன்னை எலிப் பொறியில் மாட்டிக் கொண்ட எலி என எண்ணி அனைவரும் வேடிக்கை பார்ப்பார்கள். இப்படி இவன் காதல் கீதல் என்று சொல்லிக் கொண்டு எத்தனை தைரியமாய்ச் சிங்கத்தின் குகையில் வந்து நிற்கிறான் என்று அச்சமுடன் ஒதுங்கி நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பார்கள்.

உமாகல்யாணி

"என்னோட மருமகள் ஊரிலிருந்து வந்தவுடனே என்னோட சண்டை போடுவா போலிருக்கு...."

"எப்படிச் சொல்றே...?"

"அவ எனக்கு எழுதியிருக்கிற லெட்டர்ல 'மற்றவை ஃபேபட்டில்'னுல்ல எழுதியிருக்கா!"

— ரம்யசேகர்.

அம்மா கூடச் சிபாரிசு பண்ண வர மாட்டாள். அப்புறம் அப்பா அவளைப் பிய்த்துப் பிரி கட்டி விடுவார் என்று பயப்படுவாள்.

எனவேதான் தான் போய்ச் சொல்லியாக வேண்டும் என்று எண்ணினான் வேணு. சொன்னதும் வீசப் போகிற புயலைச் சமாளிக்கவும் தன்னை ஆயத்தப் படுத்திக் கொள்ள வேண்டும் என்றும் திட்டமிட்டான்.

நிச்சயமாய் அவரிடமிருந்து ஒப்புதல் வராது. எனவே அதன் பிறகு அவரது கோணத்தை வைத்தே எதிர்க் கோணம் அமைக்க வேண்டும்.

அப்பாவின் முன்னால் போய் நின்றான்.

அவ்வளவு பெரிய விஷயத்தைத் தடுமாறாமல் அவன் சொல்லி முடித்ததே பெரிய சாதனையாக இருந்தது.

சொல்லி விட்டு அவரையே பார்த்தான்.

அப்பா முகம் மாறாமல் இருந்தார்.

ஓர் அணு குண்டு வெடித்து, போர்க்களம் ஆயத்தப்படும் என்று எண்ணினால், ஓசையற்ற மௌனம் நிலவுகிறதே!

இது ஏன்?

புயலுக்கு முன்னால் அடையாளப்படுகிற பெரு அமைதியோ?

சீறலாய்... சிம்ம கர்ஜனையாய், வெடிச் சிதறலாய்... அமளி துமளிப்படும் என்று எதிர்பார்த்திருக்க, இந்த மௌனம் ஏன்?

இது நிஜமா?

இல்லை, வேஷமோ?

இதன் பொருள்தான் என்ன?

அங்கீகரிப்பா?



அல்லது மறுப்பா?

ஓரிரு நிமிடங்கள் மௌன அவஸ்தையில் மிக மிக மெதுவே ஊர்ந்து அகன்றன.

"டேய் வேணு, நாளைக்கு அவளை... அதான் நீ சொன்னியே ரம்யாவை... இங்கே நம்ம வீட்டுக்கு அழைச்சிட்டு வா."

மிகவும் தெளிவாய்ச் சொன்னார் அப்பா.

குரலை வைத்து அவர் உணர்ச்சிகளைக் கணிக்க முடியவில்லை.

இப்படி இவர் சொன்னது அங்கீகரிப்பின் அடையாளமா, அல்லது வரச் சொல்லி முகம் கறுக்கப் பேசி பகிஷ்கரிக்கப் போவதன் அடிப்படைத் திட்டமா?

அதை இப்போது தீர்மானிக்க முடியாது.

வந்து, பேசும் போதுதான் கணிக்க முடியும்.

எனினும் 'தாட் பூட்' டென்று கத்தி விடாமல், மௌனமாய் அவளை அழைத்து வரச் சொன்னதே ஓர் இதமான ஆரம்பமாய்ப் பட்டது வேணுவிற்கு. எனவே உற்சாகம் மறைந்த குரலில் மிகவும் நயத்துடன்,

"சரிப்பா, நாளைக்கு நான் அழைச்சிட்டு வந்திர்றேன்" என்றான்.

அவளைக் குறித்து மேற்கொண்டு விவரம் எதுவும் கேட்கவில்லை. கறுப்பாய் இருப்பாளா, சிவப்பாய் இருப்பாளா என்பது கூடத் தெரியாது. அவளின் குடும்பப் பின்னணி என்ன, பெற்றவர் யார் என்கிற விவரமெதுவும் கேட்காமல், வரச் சொல் என்று கூறி விட்டாரே என்று வியந்தான். அப்படியே சிலை போல நின்றான்.

"அப்புறமும் ஏண்டா நிற்கிறே, போ... போய் வேலையைப் பார்!"

சிம்மம் உறுமியது.

"சரி அப்பா" என்றவன், நேராய்த் தனது அறைக்குப் போனான்.

கண்ணாடியில் முகம் பார்த்தான்.

தன்னையே அப்போது அவனுக்கு அடையாளம் தெரியவில்லை.

அப்பாவின் இயல்புக்கு மாறான போக்கினால் குழம்பிப் போய் வேணு தவித்தான்.

ஆனால் அவரோ,

'இத்தனை கட்டுப்பாட்டையும் மீறிக் கொண்டு பயல் காதலிக்க ஆரம்பிச்சிருக்கான்னா, அது நிஜமான ஆழமான காதல்தான். அவன் செலக்ட் பண்ணின ரம்யா... சரியான செலக்ஷனாவே இருக்கும். ஏன்னா... அங்கே இங்கே ஓட்டை உடைசல்ன்னா பயல் தைரியமாய் என் முன்னே வந்து அவளோட பெயரை உச்சரிச்சிருக்க மாட்டானே. சரி, நமக்கும் அலைச்சல் மிச்சம்! இந்தச் சந்தோஷத்தை இப்பவே கொண்டாட பால் ஸ்வீட் ஒண்ணு பண்ணச் சொல்லலாம்' என்றபடி மனைவியைத் தேடிப் போனார் வேணுவைப் பெற்றவர்.

'வேணுவால் உசுப்பப் பெற்ற சிம்மம் தன்னை நோக்கி வருகிறதே, என்ன பாடு பட வேண்டுமோ' என்கிற அச்சத்துடன் கணவனை எதிர்கொண்டாள் வேணுவின் அம்மா.

"கோர்ட்ல நீதிபதியா இருக்கிறவரைப் போய் பட்டி மன்றத்துக்கு நடுவராப் போட்டது தப்பாப் போச்சு."

"என்னாச்சு?"

"'நடுவர் தீர்ப்பு அடுத்த மாதம் பதினைந்தாம் தேதிக்கு ஒத்தி வைக்கப்பட்டுள்ளது'ன்னு சொல்லிட்டாரே!"

— சீர்காழி ஸ்ரீராம்.





டாக்டர்: அடிக்கடி தேர்தலில் தோற்றுப் போகிற மாதிரி சொப்பனம் வருதுன்னு சொன்னதற்கு மருந்து கொடுத்தேனே! இம்ப்ரூவ்மெண்ட் இருக்கா?

அரசியல்வாதி: ஓ, இருக்கே! இப்போ டெபாசிட் திரும்பக் கிடைச்சுடறது!

— பாலஜி

"ஊசிதான் போட்டாச்சே! எதுக்கு 'ஆபரேஷன்' பண்ணணும்னு சொல்றீங்க?"

"உடைஞ்சு போயிட்ட ஊசி முனையை எடுக்கத்தான்!"

— ஆர். வசந்தகுமார்



எழுத்தாளர்: "நான் 'சிரி, செட்டி!'ன்னு ஒரு புத்தகம் எழுதிப் பிரகாசர்த்தாவிடம் கொடுத்தேன். அவர் தலைப்பைப் புரிஞ்சுக்கலை போலிருக்கு."

நண்பர்: "என்ன செய்தார்?"

எழுத்தாளர்: "புத்தகம் வெளியானதும் என்னிடம் வந்து, 'சார், புத்தகம் நல்லாப் போகுது. இதேபோல, 'சிரி, குஜராத்தி!' 'சிரி மார்வாரி!' 'சிரி பார்ஸி'ன்னு நிறைய எழுதித் தாங்க ஸார்'னு சொல்றாரு!"

— ரா. ரகோத்தமன்.



"எங்கள் பரம்பரையே அரசியல்வாதிகள் பரம்பரை. நான் அதில் வரலாறு படைத்து விட்டேன்."

"எப்படி?"

"நான்தான் முதன் முதலா டெபாசிட்டை இழக்காமல் தோற்றுப் போயிருக்கேன்."

— பர்லி



# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 32
## "ஏன் என்னை வதைக்கிறாய்?"

சுந்தர சோழர் மிக்க வியப்பு அடைந்தார். மேன் மாடத்திலிருந்து அவ்வாறு தூண்களின் விளிம்பின் வழியாக யார் இறங்கி வருகிறது? எதற்காக வர வேண்டும்? இத்தனை நேரம் கண்ட குழப்பமான கனவுகள் நினைவு வந்தன. இதுவும் கனவிலே காணும் தோற்றமா? இன்னும் தாம் தூக்கத்திலிருந்து நன்றாக விழித்துக் கொள்ளவில்லையா? — இந்தச் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகச் சுந்தர சோழர் மறுபடியும் கண்களை மூடிக் கொண்டார். ஒரு நிமிஷ நேரம் அவ்வாறு இருந்து விட்டுக் கண்களை நன்றாகத் திறந்து அந்த உருவம் இறங்கிய திக்கைப் பார்த்தார். அங்கே இப்போது ஒன்றும் இல்லை. ஆகா! அந்தத் தோற்றம் வெறும் பிரமையாகத்தான் இருக்க வேண்டும்.

அவர் உறங்குவதற்கு முன்னால் நிகழ்ந்தவற்றை ஞாபகப்படுத்திக் கொண்டார். முதன் மந்திரியும், அவருடைய சீடனும், இனிய குரலில் பாடிய தியாகவிடங்கரின் மகளும் தாம் தூங்கிய பிறகு போய் விட்டார்கள் போலும். மலையமான் மகளும் தாதிமார்களும் வழக்கம் போல் அடுத்த அறையிலே காத்திருக்கிறார்கள் போலும். தமது செல்வத் திருமகளும் அவர்களுடனே இருக்கிறாள் போலும். குந்தவையைக் குறித்துத் தாம் முதன் மந்திரியிடம் குறை கூறியதைச் சக்கரவர்த்தி நினைத்துக் கொண்டு சிறிது வருத்தப்பட்டார். குந்தவை இணையற்ற அறிவும் முன் யோசனையும் படைத்தவள். இராஜ்யத்திலே குழப்பம் ஏற்படாமலிருக்கும் பொருட்டு இளவரசனை நாகைப் பட்டினத்தில் இருக்கச் செய்திருக்கிறாள். அதைப் பற்றித் தவறாக எண்ணிக் கொண்டது தம்முடைய தவறு. தமது அறிவு சரியான நிலைமையில் இல்லை என்பது சில காலமாகச் சுந்தர சோழருக்கே தெரிந்திருந்தது. பின்னே, இளைய பிராட்டியின் பேரில் கோபித்துக் கொள்வதில் என்ன பயன்? எதையும் அவளுடைய யோசனைப்படி செய்வதே நல்லது. இப்போது முக்கியமாகச் செய்ய வேண்டியது நாகைப்பட்டினத்திலிருந்து இளவரசனை அழைத்து வர வேண்டியது. கடவுளே! புயலினால் அவனுக்கு யாதொரு ஆபத்தும் நேரிடாமல் இருக்க வேண்டுமே! உடனே

அமரர் கல்கி

குந்தவையிடம் அதைப் பற்றிக் கேட்க வேண்டும்.... பக்கத்து அறையில் இருப்பவர்களை அழைப்பதற்காகச் சுந்தர சோழர் கையைத் தட்ட எண்ணினார்....

ஆனால் இது என்ன? தம்முடைய தலைமாட்டில் யாரோ நடமாடுவது போல் தோன்றுகிறதே! ஆனால் காலடிச் சத்தம் மிக மெதுவாக, — பூனை, புலி முதலிய மிருகங்கள் நடமாடுவது போல், — கேட்கிறது. யாராயிருக்கும்? ஒருவேளை மலையமான் மகளா? தம் குமாரியா? தாதிப் பெண்ணா? தமது உறக்கத்தைக் கலைக்கக் கூடாது என்று அவ்வளவு மெதுவாக அவர்கள் நடக்கிறார்களா?

"யார் அது?" என்று மெதுவான குரலில் சுந்தர சோழர் கேட்டார். அதற்குப் பதில் இல்லை.

"யார் அது? இப்படி எதிரே வா!" என்று சற்று உரத்த குரலில் கூறினார். அதற்கும் மறு மொழி இல்லை.



ந்தர சோழருக்கு ஓர் எண்ணம் தோன்றியது. அது அவருக்குக் குழப்பத்தையும் திகிலையும் உண்டாக்கியது. ஒரு வேளை அவளாக இருக்குமோ? அவளுடைய ஆவியாக இருக்குமோ? கனவிலே தோன்றிய கிராதகி இப்போது நேரிலும் வந்து விட்டாளா? நள்ளிரவில் அல்லவா ஆடை ஆபரண பூஷிதையாக வந்து தன்னைத் துன்புறுத்துவது வழக்கம்? இப்போது முன் மாலையிலேயே வந்து விட்டாளா? அல்லது ஒருவேளை நள்ளிரவு ஆகி விட்டதா? அவ்வளவு நேரம் தூங்கிவிட்டோமா? அதனாலே தான் ஒரு வேளை மலையமான் மகளும் தம் குமாரியும் இங்கே இல்லையோ? தாதிப் பெண்களும் தூங்கி விட்டார்களோ? ஐயோ! அவர்கள் ஏன் என்னைத் தனியாக விட்டு விட்டுப் போனார்கள்? அந்தப் பாதகி, கரையர் மகளாக இருந்தால் என்னை இலேசில் விட மாட்டாளே? உள்ளம் குமுறி வெறி கொள்ளும் வரையில் போக மாட்டாளே?

அடி பாவி! உண்மையில் நீயாக இருந்தால் என் முன்னால் வந்து தொலை! என்னை எப்படியெல்லாம் வதைக்க வேண்டுமோ, அப்படியெல்லாம் வதைத்து விட்டுப் போ! ஏன் நான் பார்க்க முடியாதபடி தலைமாட்டில் உலாவி என் பிராணனை வாங்குகிறாய்! முன்னால் வா! இரத்த பலி கேட்பதற்காக வந்திருக்கிறாயா? வா! வா! நீதான் மடியில் கத்தி வைத்திருப்பாயே? புலி கரடிகளைக் கொன்ற அதே கத்தியினால் என்னையும் கொன்று விட்டுப் போய் விடு! என் மக்களை மட்டும் ஒன்றும் செய்யாதே! நான் செய்த குற்றத்துக்காக அவர்களைப் பழி வாங்காதே! அவர்கள் உனக்கு ஒரு துரோகமும் செய்யவில்லையடி! நான்தான் உனக்கு என்ன துரோகம் செய்தேன்? கலங்கரை விளக்கத்தின் உச்சியில் ஏறிக் கடலில் விழுந்து சாகும்படி நானா சொன்னேன்? நீயே செய்த அந்தக் கோரமான காரியத்துக்கு என்னை எதற்காக வதைக்கிறாய்?....

சுந்தர சோழர் தம்முடைய தலைமாட்டில் வெகு சமீபத்தில் ஓர் உருவம் வந்து நிற்பதை உணர்ந்தார். திகிலினால் அவருடைய உடம்பு நடுங்கியது. வயிற்றிலிருந்து குடல் மேலே ஏறி நெஞ்சை அடைத்துக் கொண்டது போலிருந்தது! நெஞ்சு மேலே ஏறித் தொண்டையை அடைத்துக் கொண்டது. கண் விழிகள் பிதுங்கி வெளியே வந்து விடும் போலிருந்தது. அவள்தான் வந்து நிற்கிறாள். சந்தேகமில்லை. அவளுடைய ஆவிதான் வந்து நிற்கிறது! தாம் நினைத்தபடியே கடைசியாக இரத்தப் பழி வாங்குவதற்கு வந்திருக்கிறது. தம் நெஞ்சில் கத்தியால் குத்தித் தம்மைக் கொல்லப் போகிறது. அல்லது வெறுங் கையினாலேயே தம் தொண்டையை நெரித்துக் கொல்லப் போகிறதோ, என்னமோ? எப்படியாவது அவள் எண்ணம் நிறைவேறட்டும்! தாம் இனி உயிர் வாழ்ந்திருப்பதில் யாருக்கும் எந்த உபயோகமும் இல்லை. அந்தப் பேய் தம்மைப் பழி வாங்கி விட்டுப் போனால் தம் மக்களை ஒன்றும் செய்யாமல் விட்டு விடும் அல்லவா?

இன்னும் சிறிது நிமிர்ந்து அண்ணாந்து பார்த்தால், மந்தாகினிப்

பேயின் ஆவி வடிவம் தம் கண்களுக்குப் புலனாகும் என்று சுந்தர சோழருக்குத் தோன்றியது. தலைமாட்டில் அவ்வளவு சமீபத்தில் அந்த உருவம் வந்து நிற்பது போலிருந்தது. அதன் நிழல்கூட அவர் முகத்திலே விழுந்தது போலிருந்தது. ஒரு கணம் நிமிர்ந்து பார்ப்பதற்கு எண்ணினார். அவ்வளவு தைரியம் வரவில்லை. "நான் கண்களை இறுக மூடிக் கொள்கிறேன். அது செய்வதைச் செய்து விட்டுப் போகட்டும்!" என்று தீர்மானித்துக் கண்களை மூடிக் கொண்டார்.

சற்று நேரம் அப்படியே இருந்தார். அவர் எதிர் பார்த்தது போல் அவர் நெஞ்சில் கூரிய கத்தி இறங்கவும் இல்லை. அவர் தொண்டையை இரண்டு ஆவி வடிவக் கைகள் பிடித்து நெரிக்கவும் இல்லை.

அந்த உருவம், — அவர் தலைமாட்டில் நின்ற உருவம், — அங்கிருந்து நகர்ந்து போய் விட்டதாகத் தோன்றியது.

ஆகா! கரையர் மகள் அவ்வளவு சுலபமாக என்னை விட மாட்டாள். இன்னும் எத்தனை காலம் என்னை உயிரோடு வைத்திருந்து சித்திரவதை செய்ய வேண்டுமோ செய்வாள்! இன்றைக்கு என் கண்ணில் படாமலே திரும்பித் தொலைந்து போய் விட்டாள் போலும்! சரி, சரி! யாரையாவது கூப்பிடலாம். யாராவது இந்த அறைக்குள்ளே வந்தால், இன்னும் இவள் ஒருவேளை இங்கேயே இருந்தாலும் மறைந்து போய்த் தொலைவாள்!

"யார் அங்கே? எல்லாரும் எங்கே போனீர்கள்?" என்று உரத்த குரலில் கூவிக் கொண்டே சுந்தர சோழர் கண்களைத் திறந்தார்.

ஆகா! அவர் எதிரே, மஞ்சத்தின் கீழ்ப்புறத்தில், நிற்பது யார்? அவள் தான், சந்தேகமில்லை! அந்த ஊமையின் பேய்தான்! தலைவிரி கோலமாக நிற்கிறது அந்தப் பேய்! அதன் நெற்றியிலே இரத்தம் கொட்டுகிறது! "இரத்தப் பழி வாங்க வந்தேன்!" என்று சொல்லுகிறது போலும்! சுந்தர சோழர் உரத்த குரலில் வெறி கொண்டவரைப் போல் அந்த ஆவி உருவத்தைப் பார்த்த வண்ணமாகக் கத்தினார்:—

"அடி ஊமைப் பேயே! நீ உயிரோடிருந்த போதும் வாய் திறந்து பேசாமல் என்னை வதைத்தாய்! இப்போதும் பேசாமல் வதைக்கிறாய்! எதற்காக வந்திருக்கிறாய், சொல்லு! இரத்தப் பழிவாங்க வந்திருந்தால் என்னைப் பழிவாங்கி விட்டுப் போ! ஏன் சும்மா நிற்கிறாய்? ஏன் முகத்தை இப்படிப் பரிதாபமாக வைத்துக் கொண்டிருக்கிறாய்? என்னிடம் ஏதாவது கேட்க வந்திருக்கிறாயா? அப்படியானால் சொல்லு! வாய் திறந்து பேச முடியவில்லையென்றால், சமிக்ஞையினாலே சொல்லு! வெறுமனே நின்று கொண்டு என்னை வதைக்காதே! உன் கண்ணில் ஏன் கண்ணீர் ததும்புகிறது? ஐயையோ! விம்மி அழுகிறாயா, என்ன? என்னால் பொறுக்க முடியவில்லையே! ஏதாவது சொல்லுகிறதாயிருந்தால் சொல்லு! இல்லாவிட்டால் தொலைந்து போ! போக மாட்டாயா? ஏன் போக மாட்டாய்? என்னை என்ன, செய்ய வேண்டுமென்றுதான் எண்ணிக் கொண்டிருக்கிறாய்? என் அருமை மகனை — சின்னஞ் சிறு குழந்தையை — காவேரி வெள்ளத்தில் அமுக்கிக் கொல்லப் பார்த்தவள்தானே நீ! கடவுள் அருளால் உன் எண்ணம் பலிக்கவில்லை. இனியும் பலிக்கப் போவதில்லை! அடி பாதகி! இன்னும் எதற்காக என் நெஞ்சைப் பிளக்கிறவள் போலப் பார்த்துக் கொண்டு நிற்கிறாய்? போ! போ! போக மாட்டாயா? போக மாட்டாயா! இதோ உன்னைப் போகும்படி செய்கிறேன், பார்!...."

இப்படிச் சொல்லிக் கொண்டே சுந்தர சோழர் தமதருகில் கைக்கெட்டும் தூரத்தில் என்ன பொருள் இருக்கிறதென்று பார்த்தார். பஞ்ச உலோகங்களினால் செய்த அகல் விளக்கு ஒன்றுதான் அவ்விதம் கைக்குக் கிடைப்பதாகத் தென்பட்டது. அதை எடுத்துக் கொண்டு, "போ! பேயே! போ!" என்று அலறிக் கொண்டு, மந்தாகினிப் பேயின் முகத்தைக் குறி பார்த்து வீசி எறிந்தார். திருமால் எறிந்த சக்ராயுதத்தைப் போல் அந்தத் தீபம் சுடர் விட்டு எரிந்த வண்ணம் அந்தப் பெண்ணுருவத்தை

நோக்கிப் பாய்ந்து சென்றது.

அப்போது சுந்தர சோழர் பேய் என்று கருதிய அந்தப் பெண் உருவத்தின் வாயிலிருந்து ஓர் ஓலக் குரல் கிளம்பிற்று.

சுந்தர சோழருடைய ஏழு நாடியும் ஒடுங்கி, அவருடைய உடலும் சதையும் எலும்பும் எலும்புக்குள்ளே இருந்த ஜீவ சத்தும் உறைந்து போயின.

தீபம் அந்த உருவத்தின் முகத்தின் மீது விழவில்லை. சற்று முன்னாலேயே தரையில் விழுந்து உருண்டு 'டணங் டணங்' என்று சத்தமிட்டது.

அகல் விளக்கு அணைந்து விட்ட போதிலும், நல்ல வேளையாக அந்த அறையின் இன்னொரு பக்கத்தில் வேறொரு தீபம் எரிந்து கொண்டிருந்தது.

அதன் மங்கலான வெளிச்சத்தில் சுந்தர சோழர் உற்றுப் பார்த்து, மந்தாகினியின் ஆவி வடிவம் இன்னும் அங்கேயே நிற்பதைக் கண்டார். அதனுடைய முகத்தில் விவரிக்க முடியாத வேதனை ஒரு கணம் காணப்பட்டது. பின்னர் அது கடைசி முறையாக ஒரு தடவை சுந்தர சோழரை அளவில்லாத ஆதங்கத்துடன் பார்த்து விட்டுத் திரும்பி அங்கிருந்து போவதற்கு யத்தனித்தது.



அந்த நேரத்திலேதான் சுந்தர சோழரின் உள்ளத்திலே முதன் முதலாக ஒரு சந்தேகம் உதித்தது. இது மந்தாகினியின் ஆவி உருவமா? அல்லது அவளை வடிவத்தில் முழுக்க முழுக்க ஒத்த இன்னொரு ஸ்திரீயா? அவளுடன் இரட்டையாகப் பிறந்த சகோதரியா? அல்லது ஒரு வேளை.... ஒருவேளை... அவளேதானா? அவள் சாகவில்லையா? இன்னமும் உயிரோடிருக்கிறாளா? தாம் நினைத்ததெல்லாம் தவறா? அவளேயாக இருக்கும் பட்சத்தில் அவள் பேரில் தாம் விளக்கை எடுத்து எறிந்தது எவ்வளவு கொடுமை? அவளுடைய முகத்தில் சற்று முன் காணப்பட்ட பரிதாபம் மாறி, விவரிக்க முடியாத வேதனை தோன்றியதே? தம்முடைய கொடூரத்தை எண்ணி அவள் வேதனைப்பட்டாளோ? — ஆகா! அதோ அவள் திரும்பிப் போக யத்தனிக்கிறாள். எந்தப் பக்கம் போகலாம் என்று பார்க்கிறாள்.

"பெண்ணே! நீ கரையர் மகள் மந்தாகினியா? அல்லது அவளுடைய ஆவி வடிவமா? அல்லது அவளுடன் பிறந்த சகோதரியா? நில், நில்!



போகாதே! உண்மையைச் சொல்லி விட்டுப் போ!...''

இவ்விதம் சுந்தர சோழர் பெருங் குரலில் கூவிக் கொண்டிருந்த போது தடதடவென்று பலர் அந்த அறைக்குள் புகுந்தார்கள். மலையமான் மகள், குந்தவை, வானதி, பூங்குழலி, முதன் மந்திரி, அவருடைய சீடன், — அத்தனை பேரும் அறைக்குள்ளே வருகிறார்கள் என்பதைச் சுந்தர சோழர் ஒரு கண நேரத்தில் தெரிந்து கொண்டார்.

''நிறுத்துங்கள்! அவள் ஓடிப் போகாமல் தடுத்து நிறுத்துங்கள்! அவள் யார், எதற்காக வந்தாள் என்பதைக் கேளுங்கள்!'' என்று சுந்தர சோழர் அலறினார்.

உள்ளே வந்தவர்கள் அவ்வளவு பேரும் ஒரு கணம் வியப்பினால் திகைத்துப் போய் நின்றார்கள். சுந்தர சோழரின் வெறிகொண்ட முகத் தோற்றமும், அவருடைய அலறும் குரலில் தொனித்த பயங்கரமும் அவர்களுக்குப் பீதியை உண்டாக்கின. மந்தாகினி தேவியை அங்கே பார்த்தது அவர்களை வியப்பு வெள்ளத்தில் திக்குமுக்காடச் செய்தது. இன்னது செய்வது என்று அறியாமல் எல்லாரும் சற்று நேரம் அசைவற்று நின்றார்கள். முதன் மந்திரி அநிருத்தர் நிலைமை இன்னதென்பதையும் அது எவ்வாறு நேர்ந்திருக்கக் கூடும் என்பதையும் ஒருவாறு ஊகித்து உணர்ந்து கொண்டார். அவர் பூங்குழலியைப் பார்த்து, ''பெண்ணே! இவள்தானே உன் அத்தை!'' என்றார்.

''ஆம், ஐயா!'' என்றாள் பூங்குழலி.

''திருமலை! ஏன் மரம் போல நிற்கிறாய்? மந்தாகினி தேவி ஓடப் பார்க்கிறாள்! அவளைத் தடுத்து நிறுத்து! சக்கரவர்த்தியின் கட்டளை!'' என்றார்.

ஆழ்வார்க்கடியான் தன் வாணாளில் முதன் முறையாகக் குருவின் கட்டளைக்குக் கீழ்ப்படிய மறுத்தான். ''ஐயா! அதைக் காட்டிலும் புயற்காற்றைத் தடுத்து நிறுத்தும்படி எனக்குக் கட்டளையிடுங்கள்!'' என்றான்.

இதற்குள் பூங்குழலி சும்மா இருக்கவில்லை. ஒரே பாய்ச்சலாக ஓடிச் சென்று அத்தையின் தோளைப் பிடித்துக்கொண்டாள். மந்தாகினி அவளை உதறித் தள்ளிவிட்டு ஓடினாள்.

ஆழ்வார்க்கடியான் சட்டென்று ஒரு காரியம் செய்தான். சற்று முன்னால் முதன் மந்திரி முதலியவர்கள் நுழைந்து வந்த கதவண்டை சென்று அதைச் சாத்தித் தாளிட்டான். பிறகு கதவை யாரும் திறக்க முடியாதபடி கைகளை விரித்துக் கொண்டு நின்

றான்.

வேடர்களால் சூழ்ந்து கொள்ளப் பட்ட மானைப் போல் நாலுபுறமும் பார்த்து மிரண்டு விழித்தாள் மந்தாகினி. தப்பிச் செல்வதற்கு வேறு வழி இல்லை என்றும், தான் இறங்கி வந்த வழியாக ஏறிச் செல்ல வேண்டியது தான் என்றும் தீர்மானித்துக் கொண்டாள். அவள்மேல் மாடியை நோக்கிய பார்வையிலிருந்து அவளுடைய உத்தேசத்தை மற்றவர்களும் உணர்ந்து கொண்டார்கள்.

சுந்தரசோழர், "பிடியுங்கள்! அவளைப் பிடித்து நிறுத்துங்கள்! அவள் எதற்காக வந்தாள், யாரைப் பழி வாங்க வந்தாள் என்று கேளுங்கள்!" என்று மேலும் கத்தினார்.

தூணின்வழியாகமேல்மாடத்துக்கு ஏறிச் செல்ல ஆயத்தமாயிருந்த மந்தாகினி தேவியிடம் மறுபடியும் பூங்குழலி ஓடி நெருங்கினாள். இம்முறை அவளைப் பிடித்து நிறுத்துவதற்குப் பதிலாகப் பூங்குழலி கையினால் சமிக்ஞை செய்து ஏதோ கூற முயன்றாள். மந்தாகினி அதன் பொருளைத் தெரிந்து கொண்டவள்போல், கீழே விழுந்து கிடந்த அகல் விளக்கைச் சுட்டிக் காட்டினாள்.

இதைக் கவனித்துக் கொண்டிருந்த குந்தவை, "அப்பா! பெரியம்மாவின் பேரில் தாங்கள்தான் விளக்கை எடுத்து எறிந்தீர்களா?" என்று கேட்டாள்.

"ஆம், மகளே! அந்தப் பேய் என்னைப் பார்த்த பார்வையை என்னால் சகிக்க முடியவில்லை. அதனால் விளக்கை எடுத்து எறிந்தேன்!" என்றார் சுந்தர சோழர்.

"தந்தையே! பேயுமல்ல; ஆவியும் அல்ல; உயிரோடிருக்கும் மாதரசியே தான். அப்பா! பெரியம்மா சாகவே இல்லை! முதன் மந்திரியைக் கேளுங்கள்! எல்லாம் சொல்லுவார்!" என்று குந்தவை கூறிவிட்டு, மந்தாகினியும் பூங்குழலியும் மௌன வாக்கு வாதம் செய்து கொண்டிருந்த காட்சியைப் பார்த்தாள். உடனே அந்த இடத்துக்குப் பாய்ந்து சென்றாள்.

"மகளே! அவளிடம் போகாதே! அந்த ராட்சஸி உன்னை ஏதாவது செய்து விடுவாள்!" என்று சுந்தர சோழர் கூவிக் கொண்டே குந்தவையைத் தடுப்பதற்காகப் படுக்கையிலிருந்து பரபரப்புடன் எழுந்திருக்க முயன்றார்.

மலையமான் மகள் வானமாதேவி அவருடைய தோள்களை ஆதரவுடன் பிடித்துப் படுக்கையில் சாய வைத்தாள்.

"பிரபு! சற்றுப் பொறுங்கள்! தங்கள் திருமகளுக்கு அபாயம் ஒன்றும் நேராது!" என்று கூறினாள்.

## அத்தியாயம் 33
## "சோழர் குல தெய்வம்"



குந்தவை தன் அருகில் வந்ததும்மந்தாகினி அவளை ஒரு கணம் உற்றுப் பார்த்தாள். அப்போது யாரும் எதிர்பாராத ஒரு காரியத்தை இளைய பிராட்டி செய்தாள். தரையில் விழுந்து மந்தாகினியின் பாதங்களைத்தொட்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தாள். மந்தாகினியின் கண்களில் கண்ணீர் பெருகிற்று. அவள் குனிந்து குந்தவையைத் தூக்கி எடுத்து அணைத்துக் கொண்டாள். பிறகு இளையபிராட்டி அவளுடைய ஒரு கையைத் தோள்வரையில் சேர்த்துத் தன் கையினால் தழுவிப் பிணைத்துக் கொண்டு சக்கரவர்த்தி படுத்திருந்த இடத்தை நோக்கி வந்தாள்.

சக்கரவர்த்தினி இப்போதுதான் மந்தாகினியின் முகத்தை நன்றாகப் பார்த்தார். அவளுடைய நெற்றியிலிருந்து இரத்தம் வழிவதைக் கண்டாள்.

"சுவாமி! தாங்கள்தான் விளக்கை எறிந்து காயப்படுத்தி விட்டீர்களா? ஐயோ! என்ன காரியம் செய்தீர்கள்?" என்று மலையமான் மகள் அலறினாள்.

"இல்லை, இல்லை! நான் எறிந்த

விளக்கு இவள் பேரில் விழவே இல்லை. அதற்கு முன்னாலேயே இவள் இரத்தக் காயத்துடன் வந்து நின்றாள். ஆனால் இந்தப் பாதகி என் பேரில் பழி சொன்னாலும் சொல்லுவாள்! நீங்களும் நம்பி விடுவீர்கள். நீங்கள் எல்லாருமே அவளுடைய பட்சத்தில் இருக்கிறீர்கள். மலையமான் மகளே! இவளிடம் நீ கூடப் பரிதாபப்படுகிறாயே? இவள் யார் என்பது உனக்குத் தெரியுமா?'' என்று சுந்தர சோழர் கேட்டார்.

''தெரியும் சுவாமி! இவர் என் குல தெய்வம். சோழர் குலத்துக்கே தெய்வம். என் அருமை மகன் காவேரியில் முழுகிப் போய் விடாமல் காப்பாற்றிக் கொடுத்த தெய்வம் - அல்லவா?......''

''ஆகா! நீ கூட அவ்விதம் நம்புகிறாயா? குந்தவை ஒருவேளை அவ்வாறு உன்னிடமும் சொன்னாளா?''

''நானே கண்ணால் பார்த்ததைத்தான் சொல்கிறேன். குந்தவையும் அப்போது குழந்தை அல்லவா? அவளுக்கு என்ன தெரிந்திருக்க முடியும்? அருள்மொழியைக் காப்பாற்றியது மட்டும் அல்ல. சோழ நாட்டுக்குத் தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொடுத்த தெய்வமும் இவர்தானே! தாங்கள் பூதத்தீவில் காட்டுக் கரடிக்கு இரையாகாமல் காப்பாற்றிய தெய்வம் அல்லவா?''

''கடவுளே! அதுகூட உனக்குத் தெரியுமா? இவள் இத்தனை நாள் உயிரோடு இருந்து வருகிறாள் என்பதும் தெரியுமா?''

''சில காலமாகத் தெரியும். தெரிந்தது முதல் இத்தேவியை ஈழ நாட்டிலிருந்து அழைத்து வரும்படி முதன் மந்திரியிடம் சொல்லிக் கொண்டிருந்தேன்......''

''அநிருத்தரே! இது என்ன மகாராணி சொல்லுவது? இவள் உண்மையிலேயே அந்தக் கரையர் மகள்தானா? இவள் உயிரோடுதானிருக்கிறாளா? இவள் இறந்து விட்டாள் என்பது பொய்யா? இவள் ஆவி என்னை வந்து சுற்றுகிறதென்று நான் எண்ணியதெல்லாம் பிரமையா? ஏற்கெனவே என் அறிவு குழம்பியிருக்கிறது. எல்லாருமாகச் சேர்ந்து என்னை முழுப் பைத்தியமாக்கி விடாதீர்கள்!'' என்றார் சக்கரவர்த்தி சுந்தர சோழர்.

''பிரபு! இவர் கரையர் மகள் என்பது உண்மைதான். இவர் இறக்கவில்லை என்பதும் உண்மைதான். சக்கரவர்த்தி! நான் பெரிய குற்றவாளி. நான் செய்த குற்றத்துக்கு மன்னிப்பே இல்லை. ஆனாலும் தங்கள் கருணையினால்......''

''முதன் மந்திரி! இப்போது தெரிகிறது. கோடிக்கரையிலிருந்து நீர் பலவந்தமாகப் பிடித்துக் கொண்டு வரச் சொன்னவள் இவள்தான்! பல்லக்கில் வந்தவள் அந்த ஓடக்காரப் பெண் என்று நீர் கூறியது உண்மையல்ல!......''

''மன்னர் மன்னா! அடியேனை மன்னிக்க வேண்டும்!''

''ஆகா! மன்னிக்க வேண்டுமாம்! சக்கரவர்த்தி என்றும், மன்னர் மன்னன் என்றும் கூறப்பட்ட ஒருவன் என்னைப் போல் ஏமாற்றப்பட்டது இந்த உலகம் தோன்றிய காலத்திலிருந்து நேர்ந்திராது. எனக்குத் தெரியாமல் ஏன் இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும்? ஏன் முன்னாலேயே சொல்லியிருக்கக் கூடாது? இன்று சாயங்காலம் என்னுடன் அத்தனை நேரம் பேசிக் கொண்டிருந்தீர்களே? அப்போது கூட ஏன் சொல்லவில்லை? முதன் மந்திரி! எனக்கு எல்லாம் விளங்குகிறது. பழுவேட்டரையர்கள் சொல்லுவது சரிதான். நீங்கள் எல்லோருமாகச் சேர்ந்து எனக்கு எதிராகச் சூழ்ச்சி செய்கிறீர்கள்!''

''நாங்கள் சூழ்ச்சி செய்தது என்னமோ உண்மைதான். ஆனால் தங்களுக்கு எதிராகச் சூழ்ச்சி செய்யவில்லை. எப்படியாவது கரையர் மகளைத் தங்களிடம் கொண்டு வந்து சேர்ப்பிக்க வேண்டுமென்று எண்ணினோம். அவள் கடலில் விழுந்து இறந்தது பற்றித் தங்கள் மனம் மிக்க வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறது என்று மகாராணியின் மூலமாக அறிந்து நான் இந்த முடிவுக்கு வந்தேன். மகாராணியும் அவ்விதம் ஆக்ஞாபித்தார்கள். ஆனால் அவரை அழைத்து வருவது எளிய காரியமாயில்லை. அவர் உயி

''ஏம்பா நேற்று சாதா காப்பி சாப்பிட்டேன், நல்லால்லே. அதனாலே ஸ்பெஷல் காப்பிக்கு இன்று ஆர்டர் பண்ணினேன். ஒரு வித்தியாசமும் தெரியலையே?''

''ஏன், விலையிலே வித்தியாசம் இருக்கே!''

— ஞா. ஞானமுத்து

ரோடிருப்பதாகச் சொன்னால் தாங்கள் நம்புவது சிரமமாயிருக்கும். ஆகையால் எப்படியும் அவரை இந்த ஊரில் கொண்டு வந்து சேர்த்த பிற்பாடு தங்களிடம் சொல்ல எண்ணினேன். நேற்று மாலை கோட்டை வாசலுக்குக் கிட்டத்தட்ட வந்த பிறகு மந்தாகினி தேவி மறைந்து விட்டார். அவருக்குப் பதிலாக இந்தப் பெண் பல்லக்கிலே வந்தாள். இன்றைக்கெல்லாம் தேவியைத் தேடுவதில் ஈடுபட்டிருந்தோம். அவர் பழுவூர் அரண்மனைத் தோட்டத்தின் மதில் ஏறிக் குதித்ததைப் பார்த்து விட்டுத்தான் என் சீடனும் அவ்வாறு மதில் ஏறிக் குதித்தான். ஆனால் இந்தத் தேவி அகப்படவில்லை. திருமலையைப் பழுவூர் ஆட்கள் பிடித்துக் கொண்டு வந்தார்கள். சக்கரவர்த்தி! என் சீடனை அக்குற்றத்துக்காக மன்னிக்கப் பிரார்த்திக்கிறேன்.''

''மன்னிப்பதற்கு இது ஒரு குற்றந்தானா? எவ்வளவோ இருக்கிறது! அப்புறம் சொல்லுங்கள்!''

''அப்புறம், இன்று சாயங்காலம் வரை காத்திருந்தும், பழுவூர் அரண்மனைக்குள்ளே தேடியும், இவரைக் காணவில்லை. தாங்கள் சற்று முன் கண்ணயர்ந்திருந்த போது நாங்கள் எல்லாரும் அடுத்த அறையில் இவரைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தோம். இவர் எங்கே மறைந்திருக்கக் கூடும் என்றும், இதையெல்லாம் பற்றித் தங்களிடம் எப்படிச் சொல்லுவது, யார் சொல்லுவது என்றும் யோசனை செய்து கொண்டிருந்தோம். அதற்குள் இவராகவே எப்படியோ தங்கள் சந்நிதிக்கு வந்து சேர்ந்திருக்கிறார். பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று!''

க்கரவர்த்தி அப்போது மந்தாகினி தேவி இருந்த இடத்தை நோக்கினார். குந்தவை, பூங்குழலி முதலியோர் அந்தப் பெண்மணியின் நெற்றியிலிருந்த காயத்தை ஈரத் துணியினால் துடைத்து விட்டு மருந்து கலந்த சந்தனக் குழம்பை அதன் பேரில் அப்புவதைக் கவனித்தார்.

''விடங்கர் மகளே! உன் அத்தையின் நெற்றியில் காயம் எப்படி ஏற்பட்டதென்று கேட்டுச் சொல்வாயா?'' என்றார்.

பூங்குழலி இரண்டு அடி முன்னால் வந்து, ''கேட்டேன், பிரபு! ஆனால் அத்தை சொல்லும் காரணம் எனக்கே சரியாக விளங்கவில்லை.....'' என்றாள்.

''என்னதான் சொல்லுகிறாள்? நான் விளக்கை எறிந்ததால் ஏற்பட்ட காயம் என்று சொல்லுகிறாளா?''

''இல்லை, இல்லை! மலைமேல் முட்டிக் கொண்டதால் காயம் பட்டதாகச் சொல்கிறார். இரத்தம் வழிந்ததை அவர் கவனிக்கவில்லையென்றும் கூறுகிறார்....''

சுந்தர சோழர் அப்போது ஒரு மிக அபூர்வமான காரியம் செய்தார். கலகலவென்று நகைத்தார்! அம்மாதிரி அவர் சிரித்ததை மற்றவர்கள் பார்த்துப் பல வருஷங்கள் ஆயின. மீண்டும் மீண்டும் அவர் நினைத்து நினைத்துச் சிரித்தார். அனைவரும் அவரைக் கவலையுடன் உற்றுப் பார்க்கத் தொடங்கினார்கள்.

''முதன் மந்திரி! எதற்காக என்னை எல்லாரும் இப்படி உற்றுப் பார்க்கிறீர்கள்? எனக்குப் புதிதாகப் பைத்தியம் பிடிக்கவில்லை. பழைய பைத்தியந்தான் மிச்சமிருக்கிறது. இப்போது நான் சிரிப்பதின் காரணம் உங்களுக்கெல்லாம் தெரியவில்லையா? சோழ வள நாட்டில் இவள் மலையில் மோதிக் கொண்டு காயம் பட்டதாகக் கூறுகிறாளே? அதை எண்ணித்தான் சிரித்தேன். மலையைப் பற்றிச் சொல்வானேன்?



இங்கே ஒரு சிறிய விக்கிரகம் செய்யக் கூடக் கல் கிடைக்காதே? சோழ சக்கரவர்த்தியின் தலையில்யாராவது கல்லைப் போட விரும்பினால் அதற்குக் கூட ஒரு கருங்கல் கிட்டாதே! இவள் மலை மீது மோதிக் கொண்டதாகச் சொல்கிறாளாமே? எந்த மலையின் மேல் மோதிக் கொண்டாள்? பூங்குழலி! நன்றாகக் கேள்!" என்றார்.

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த வானதியின் முகத்தில் அப்போது ஒரு பிரகாசம் உண்டாயிற்று. அவள் சட்டென்று இரண்டு அடி முன் வந்து சக்கரவர்த்திக்கு வணக்கம் செலுத்தினாள். "ஐயா! எனக்கு ஒன்று தோன்றுகிறது. கட்டளையிட்டால் சொல்லுகிறேன்!" என்றாள்.

"வேளிர் மகளே! நீ வேறு இங்கே இருக்கிறாயா? உன்னை இத்தனை நேரமும் நான் கவனிக்கவே இல்லையே? இவ்வளவு தடபுடலுக்கும் நீ மூர்ச்சையடைந்து விழாமல் இருக்கிறாயே? அதுவே ஆச்சரியந்தான்! உனக்கு என்ன தோன்றுகிறது? எதைப் பற்றி? சொல்!" என்று சக்கரவர்த்தி ஆக்ஞாபித்தார்.

"இந்தத் தேவி மலைமேல் மோதிக் கொண்டதால் காயம் பட்டது என்கிறாரே! அதைப் பற்றி எனக்கு ஒன்று தோன்றுகிறது, ஐயா!"

"என்ன? என்ன? நீ புத்திசாலிப் பெண்! உனக்கு ஏதேனும் காரணம் புரிந்தாலும் புரிந்திருக்கும்! சீக்கிரம் சொல்! ஈழ நாட்டில் மலையில் முட்டிக் கொண்டு அந்த இரத்தக் காயத்துடனே இங்கே வந்திருக்கிறாளா?"

"இல்லை, ஐயா! இந்த அரண்மனைத் தோட்டத்தில் சிற்ப மண்டபம் ஒன்று இருக்கிறதல்லவா? அதற்குள்ளே இராவணன் தூக்கிப் பிடிக்கும் கைலாச மலை ஒன்று இருக்கிறது. ஒருவேளை அதில் இவர் முட்டிக் கொண்டிருக்கலாம்!"

இவ்விதம் வானதி சொன்னதும் அத்தனை பேரும் வியப்புக் கடலில் மூழ்கிப் போனார்கள். "இருக்கலாம், இருக்கலாம்!" "அப்படித்தான் இருக்கும்" என்று ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டார்கள்.


ந்தவை வானதியின் நெற்றியைத் தொட்டுத் திருஷ்டி கழிப்பது போல் கையை நெரித்து. "அடி என் கண்ணே! என்ன புத்திசாலியடி நீ! எங்களுக்கெல்லாம் தோன்றாதது உனக்குத் தோன்றியதே!" என்றாள்.

பூங்குழலி அதைக் கோபத்துடன் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, தன்னுடைய ஊமை அத்தையிடம் சமிக்ஞை பாஷையில் பேசினாள். பின்னர்,

"ஆமாம்; சிற்ப மண்டபத்தில் உள்ள மலைதானாம்! அந்த மண்டபத்தை நான் பார்த்திருந்தால், எனக்கும் அது தெரிந்திருக்கும்!" என்றாள்.

சக்கரவர்த்தி மந்தாகினியை உற்றுப் பார்த்துக் கொண்டே "ஆமாம்; வழி தெரியாமல் தவித்துச் சிற்ப மண்டபத்தில் மலைமேல் முட்டிக் கொண்டிருக்கிறாள். எங்கே போவதற்காக வழி தேடினாளோ, தெரியவில்லை. கடைசியில் இங்கே வந்து சேர்ந்தாள்!" என்றார்.

"தங்களிடம் வருவதற்குத்தான் வழி தேடி இருக்கிறார். அதைப் பற்றிச் சிறிதும் சந்தேகம் இல்லை. நானே இவர்களிடம் சொல்லிக் கொண்டிருந்தேன். தங்களைத் தரிசிக்காமல் இவ்விடம் விட்டுப் போக மாட்டார் என்று...."

"நான் நம்பவில்லை, முதன் மந்திரி! என்னிடம் இவள் வருவதாக இருந்தால் முன்னமே வந்திருக்க மாட்டாளா? இருபத்தைந்து வருஷமாக வந்திருக்க மாட்டாளா? இத்தனை நாள் பொறுத்திருந்து வருவானேன்? என்னைப் பேயாக வந்து சுற்றுவா.




நாமக்கல் அருகே உள்ள ஊரின் பெயர் செவிட்டுரெங்கம்பட்டி! மேட்டூர் அருகே உள்ள ஊரின் பெயர் 'கண்ணாமூச்சி'! மதுரை மாவட்டம் வேடசந்தூர் அருகே உள்ள ஊரின் பெயர் 'கள்ளெறும்பு'!

— வி. விஜயராகவன்

னேன்? ஆம், ஆம்! இவள் பேய் வடிவத்தில் இருப்பதாக எண்ணிக் கொண்டிருந்தேன். அதுவும் உண்மை தானே? பேயைப் போலத்தான் ஈழ நாட்டுக் காடு மலைகளில் அலைந்து திரிந்து வந்திருக்கிறாள். நான் இத்தனை காலமும் அரண்மனைச் சுக போகங்களில் ஆழ்ந்து காலங் கழித்திருக்கிறேன். குற்றத்தின் சக்தியைத்தான் என்னவென்று சொல்லுவது? இவளைப் போன்ற உருவத்தைக் கண்டு எத்தனை தடவை என் உள்ளம் பிரமை அடைந்திருக்கிறது? யார் கண்டது? இப்போது வந்ததைப் போல் இதற்கு முன்னாலும் இரகசியமாக வந்து என்னைப் பார்த்து விட்டுப் போனாளோ, என்னமோ? நான் பிசாசு என்று எண்ணி மிரண்டு வந்தேன்!.... இருபத்தைந்து ஆண்டு! இருபத்தைந்து யுகம்!''

இவ்விதம் தமக்குத் தாமே பேசுகிறவர் போலச் சொல்லி வந்த சக்கரவர்த்தி திடீரென்று அநிருத்தரின் பக்கம் திரும்பி, ''முதன் மந்திரி! நீர் ஏதோ குற்றம் செய்ததாகச் சொல்லி மன்னிப்புக் கேட்டீரே? அது என்ன குற்றம்?'' என்று ஆத்திரத்துடன் கேட்டார்.

அநிருத்தர் ''சக்கரவர்த்தி! குற்றவாளியிடமே குற்றத்தைப் பற்றிக் கேட்பது தர்மமா?'' என்றார்.

''பின்னே, யாரிடம் கேட்கிறது? ஆம்; ஒருவரிடமும் கேட்க வேண்டியதில்லை. உம்முடைய முகத்திலேயே எழுதியிருக்கிறது. இவள் கடலில் விழுந்து இறந்து விட்டதாக வந்து சொன்னீரே? அதுவே பொய்! இருபத்தைந்து வருஷங்களாக அந்தப் பொய்யை நீர் சாதித்து வந்தீர். நானும் நம்பி வந்தேன். அநிருத்தரே! உண்மையிலேயே உமது குற்றம் மிகப் பயங்கரமானது!......''

''அதற்கு நான் மட்டும் பொறுப்பாளி அல்ல. சக்கரவர்த்தி! கரையர் குல மகளும் பொறுப்பாளிதான்! அவர் கடலில் விழுந்தது என்னமோ உண்மை. பிறகு புனர் ஜன்மம் அடைந்தார். தங்களிடம் அவர் உயிரோடிருப்பதைச் சொல்ல வேண்டாமென்று வாக்குறுதி வாங்கிக் கொண்டார். வாக்குறுதியைக் கொடுக்காவிடில் மறுபடியும் உயிரை விட்டு விடுவேன் என்று சொன்னார். இவையெல்லாம் உண்மையா என்பதைத் தாங்களே அவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.''

''கேட்க வேண்டியதே இல்லை! அவ்விதமே இருக்கும். ஆனாலும் நீங்கள் எல்லாருமாகச் சேர்ந்து எனக்கு எதிராகச் சதி செய்கிறீர்கள் என்று நான் கூறியதிலே தவறு ஒன்றுமில்லை அல்லவா?'' என்றார் சுந்தர சோழர்.

''நான் செய்த குற்றத்துக்கு மன்னிப்பு இல்லைதான். மன்னிப்பு நான் கோரவும் இல்லை. ஆனாலும் பல வருஷ காலமாக என் மனத்திலிருந்த பாரம் இன்றைக்கு நீங்கி விட்டது. இனி எனக்கு விடை கொடுங்கள். திருவரங்கம் சென்று ஸ்ரீ ரங்கநாதருக்குச் சேவை செய்து என் நாட்களைக் கழிக்க அனுமதியுங்கள்!''

''அது முடியாத காரியம், பிரம்மராயரே! நீர் அன்று செய்த குற்றத்தினால் இன்று எத்தனையோ குழப்பங்கள் நேர்ந்திருக்கின்றன. அவற்றையெல்லாம் தீர்த்து வைத்து விட்டல்லவா நீர் ரங்கநாதருக்குச் சேவை செய்யப் போக வேண்டும்?'' என்றார் சக்கரவர்த்தி.

(தொடரும்)

# நான் ஒரு முட்டாளுங்க!

நான் ஒன்றும் என்னைப் பற்றி ரொம்பவும் பெரிதாக நினைத்துக் கொண்டிருக்கும் ஆள் இல்லை.

ஆனாலும் என் நண்பர் முத்துசாமி திடீரென்று ஒருநாள் என்னிடம் வந்து, "நான் ஆரம்பிக்கப் போகும் 'முட்டாள்கள் முன்னேற்ற முன்னணி'யில் நீங்கள்தான் முதல் உறுப்பினராகச் சேர வேண்டும்" என்று கேட்ட போது எனக்குக் கோபம்தான் வந்தது.

"என்ன வனாமுனா (வ. முத்துசாமியைச் சுருக்கமாக அப்படித்தான் நான் அழைப்பது வழக்கம்) விளையாடுகிறீர்களா?" என்றேன் கோபத்தை வெளிக்காட்டி.

"விளையாட்டு இல்லை சார். சீரியஸாகத்தான் சொல்கிறேன். உண்மையைச் சொல்லுங்கள். உங்களை யாரும் முட்டாள் என்று அழைத்ததில்லையா? அல்லது மனத்துக்குள்ளாவது உங்களைப் பற்றி யாரும் அப்படி நினைத்ததில்லையா?" என்றார் வனா முனா.

அவர் இப்படிக் கேட்டதும் என் கோபம் சங்கடமாக மாறி விட்டது. அன்று பள்ளி ஆசிரியரிலிருந்து இன்று ஆபீசில் என் பக்கத்து சீட்டில் உட்கார்ந்து வேலை செய்யும் (அதாவது வேலை செய்யாமல் உட்கார்ந்திருக்கும்) பத்மநாபன் வரை பலரின் ஒருமித்த கருத்துத்தான் இது. வனா மூனா கூறியதைப் போல் என் பள்ளி ஆசிரியரைப் போல் ஒரு சிலர் இதை வெளியே சொல்லியிருக்கிறார்கள். பத்மநாபனைப் போல் பலர் மனத்துக்குள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவ்வளவுதான் வித்தியாசம்.

என் மௌனத்தைப் பொருட்படுத்தாமல் வனா முனா அடுத்த குண்டை வீசினார்.

"அப்படி அவர்கள் உங்களைப் பற்றி நினைப்பது சரிதான் என்று உங்களுக்கே

விஜயசாரதி



ஒலி இனிமையானது
தோற்றம் புதுமையானது
படைப்பு அருமையானது

இது முதன்மையானது!






yanora® டைனுவிஷன் லிமிடெட், சென்னையின்
திவு செய்யப்பட்ட டிரேட்மார்க்.

சில சமயம் தோன்றியதில்லையா?''

சில சமயம் என்ன பல சமயம் தோன்றியிருக்கிறது! அதற்காக இதையெல்லாம் இவரிடம் ஒப்புக் கொள்ள முடியுமா என்ன?

மீண்டும் மௌனம் சாதித்தேன்.

''கேள்வியை மாற்றிக் கேட்கிறேன். மற்றவர்கள் நினைப்பது ஒருபுறம் இருக்கட்டும். நீங்களே சில சமயம் உங்களை ஒரு முட்டாள் என்று கருதியிருக்கிறீர்களா இல்லையா?'' என்றார் வனா முனா.

''வனா முனா! இந்த வாவன்னா மூவன்னா — அதாவது வாக்குமூலம் — எல்லாம் எதற்கு?'' என்றேன் பொறுமையிழந்து.

''வேறு எதற்கு? மு.மு.மு. வில் முதல் உறுப்பினராகச் சேர்வதற்கு நீங்கள் முற்றும் தகுதி உடையவர் என்பதை உங்களுக்கு உணர்த்துவதற்குத்தான்'' என்று விளக்கினார் வ.மு.

''என் கதை இருக்கட்டும். உங்கள் சமாசாரம் என்ன? நீங்கள் ஏன் முதல் உறுப்பினராகச் சேரக் கூடாது?'' என்று மடக்கினேன்.

வனா முனாவா மடங்குகிறவர்? ''எல்லாம் ஒரு தன்னடக்கம்தான்! நீங்கள் முதல் உறுப்பினராகச் சேர்ந்தால் உங்களைப் பின்பற்றும் முதல் ஆளாக நான் இருப்பேன்'' என்றவர் சற்று நிறுத்தி விட்டு, ''அதாவது நான் முன்னணியின் கன்வீனர் அல்லது அமைப்பாளர். நீங்கள் தலைவர்'' என்று ஜனநாயக(!) முறையில் பதவி விநியோகத்தைத் துவக்கினார்.

''அப்படியானால் நீங்கள் ஒரு முட்டாள் என்பதை ஒப்புக் கொள்கிறீர்களா?'' என்றேன்.

''ஒப்புக் கொள்ளவில்லை. அறிவிக்கிறேன். ஒப்புக் கொள்வது என்பது இன்னொருவர் சொல்வதை அங்கீகரிப்பது. 'நான் ஒரு முட்டாள்' என்பது என்னுடைய டிக்ளரேஷன் — கன்ஃபெஷன் இல்லை'' என்றார் வ.மு. சளைக்காமல்.

(என்னதான் வ.மு. தன்னை ஒரு முனா என்று கூறிக் கொண்டாலும் வார்த்தைகளைப் பயன்படுத்துவதில் தேர்ந்தவர்!)

கடைசியில் அவரை மடக்கும் முயற்சிகளைக் கைவிட்டுப் பணிவாக, ''உங்கள் நோக்கம்தான் என்ன?'' என்றேன்.

''அப்படிக் கேளுங்கள்'' என்றார் வ.மு. இதைச் சொல்லி விட்டு அவர் கொஞ்சம் இடைவெளி விட்டது அவர் ஒரு நீண்ட விளக்கத்தை அளிக்கப் போகிறார் என்பதைக் காட்டி விட்டது.

''நாம் ஒவ்வொருவரும் நம்மைச் சுற்றியுள்ள ஒவ்வொருவரையும் ஏதாவது ஒரு சமயத்திலாவது முட்டாள் என்று கருதியிருக்கிறோம். அவ்வாறே நாம் ஒவ்வொருவரும் நம்மை அறிந்த ஒவ்வொருவராலும் ஒரு சந்தர்ப்பத்திலாவது முட்டாள் என்று நினைக்கப்பட்டிருக்கிறோம். இதிலிருந்து என்ன தெரிகிறதென்றால் ஒவ்வொருவருமே சில சமயங்களில் முட்டாளாக இருந்திருக்கிறோம். இதைத்தான் ஓர்

அறிஞன் சொன்னான்: ஒவ்வொரு மனிதனும் தனது வாழ்நாளில் ஐந்து நிமிடமாவது முட்டாளாக இருக்கிறான். இந்த எல்லையை மீறாததில்தான் நமது புத்திசாலித்தனம் இருக்கிறது' என்று. முட்டாள்தனம் என்பது மனிதனின் இயல்பான குணம் என்று நான் நினைக்கிறேன். இந்த உண்மையை நாம் ஏன் ஏற்றுக் கொள்ளக் கூடாது?''

''எதற்காக?''

'''நமது அறியாமையை அறிந்திருப்பது தான் அறிவு' என்று வேதம் கூடக் கூறுகிறது. அது போல் நான் ஒரு முட்டாள் என்பதை உணர்ந்திருப்பதுதான் விவேகம் என்று சொல்லலாம்.''

''சரி. இந்த முன்னணியை அமைத்து என்ன சாதிக்கப் போகிறீர்கள்?''

''மக்கள் தங்கள் அறியாமையை உணர்ந்து அதைப் போக்க முயல்வார்கள். இரண்டாவது, உண்மையை ஒப்புக் கொள்ளும் பக்குவம் பெறுவார்கள். ஆனால் இதெல்லாம் பொதுவான விஷயங்கள் — குறிப்பாகப் பல சாதனைகளுக்கு நாம் வழி வகுக்கலாம். பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் அளிக்கப்படும் கல்வியைப் புரிந்து கொள்ளாமலே, கற்பதை விட்டு விட்டு, 'நாங்கள் முட்டாள்கள். எங்களுக்குப் புரியும்படி கல்வியை எளிமையாக்குங்கள்' என்று கோரலாம். மக்களுக்குப் புரியாத வண்ணம் எழுதி அதன் மூலமே தங்களைச் சிறந்த படைப்பாளிகளாகக் காட்டிக் கொள்ள முயலும் கவிஞர்களையும், எழுத்தாளர்களையும் நமக்குப் புரியும்படி எழுதுமாறு தைரியமாகக் கேட்கலாம். தேர்தல் சமயத்தில் எந்தக் கட்சி வேட்பாளர் நம்மைப் பெரிய முட்டாளாக நினைத்துச் செயல்பட்டார் என்பதைப் பகிரங்கமாக அறிவிக்கலாம்... இன்னும் எவ்வளவோ! ஏன் நாம் தவறாக ஏதாவது செய்து விட்டால் கூட மற்றவர்கள் அதைப் பெரிதுபடுத்தாமல் 'பாவம் முட்டாள்தானே!' என்று விட்டு விடுவார்கள். எல்லாவற்றுக்கும் மேலாக நம்மை யாராவது முட்டாள்கள் என்று திட்டும் போது — மேலதிகாரியோ, அடுத்த வீட்டுக்காரரோ, சாலையில் நம் மீது மோதப் பார்த்த ஆட்டோ டிரைவரோ

## அருள்வாக்கு

குகைக்குள்ளே இருபத்தோரு நாட்கள் த்வந்த யுத்தம் நடந்தது. அத்தனை நாட்களுக்குள்ளேயே ஜாம்பவானுக்கு அசக்தம் வந்துதான் விட்டதென்றாலும் அந்த நீல மேக ச்யாமள காத்ரம் தம் மேல் படுவதில் தமக்கே காரணம் தெரியாத ஒரு பெரிய ஸௌக்யத்தை அவர் அநுபவித்ததால் தான் ஒரு மாதிரி ஈடுகொடுத்து வந்தார்.



இப்போது முழுசாக மூன்று வாரம் ஆன பிறகு ஜாம்பவானால் அதற்கு மேல் தாக்குப் பிடிக்க முடியவில்லை. ராமசந்த்ர மூர்த்தியின் அநுக்ரஹ பலமே தம் பலம் என்று நன்றாகத் தெரிந்து கொண்டவர் அவர். 'ராமா ராமா' என்று சொல்லிக் கொண்டே தான் அவனுடைய அடுத்த அவதாரத்தை அடித்துக் கொண்டிருந்தார்...

'இந்த விளையாட்டையே இன்னும் எத்தனை நாட்கள் விளையாடுவது? இன்னும் எத்தனையோ விளையாட்டெல்லாம் விளையாடியாகணுமே!' என்று பகவானேதான் ஜாம்பவானுக்கு உண்மையைப் புரிய வைத்தாரென்று சொல்லலாம்.

'அடாடா! என்ன அபசாரம் பண்ணி விட்டோம்? தேடிக்கொண்டு இந்தக் காட்டுக் குஹைக்கு வந்திருக்கிற நம்முடைய உபாஸனா மூர்த்தியையே இப்படி அ நியாயமாக அடித்துப் புடைத்துவிட்டோமே' என்று ரொம்பவும் பச்சாத்தாபத்தில் மனஸ் உருகினார் ஜாம்பவான். பகவானின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

அடிப்பதை 'பூசை கொடுப்பது' என்கிற வழக்கமிருக்கிறது. யாரைப் பூஜிக்க வேண்டுமென்று ஜாம்பவான் நினைத்துக் கொண்டிருந்தாரோ அவரையே சாத்து சாத்து என்று சாத்தியதில்தான் இந்த வசனம் பிறந்ததோ என்னவோ?

காலில் விழுந்த பக்தரை பகவான் தட்டிக் கொடுத்து அன்போடு க்ஷமித்து ஆச்வாஸம் பண்ணினார்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

அல்லது வேறு எவரோ, நம்மை அடிக்கடி 'முட்டாள்' என்று திட்டிக் கொண்டுதான் இருக்கப் போகிறார்கள் — கோபப்படாமல் மகிழ்ச்சி அடையலாம். இதனால் ரத்தக் கொதிப்பு நோயைத் தவிர்க்கலாம்...''

முட்டாளாக இருப்பதில் இவ்வளவு சௌகர்யங்கள் இருப்பது இவர் பட்டியல் போட்டுக் காட்டியதும்தான் புரிந்தது. எனினும், விட்டால், விடாமல் சொல்லிக் கொண்டேயிருப்பார் போலிருக்கவே நான் பிரேக் போட்டு நிறுத்த வேண்டியிருந்தது.

''சரி... விழாவுக்கு யார் யார் வரப் போகிறார்கள். முக்கியமான விருந்தினர் யாராவது உண்டா?''

''ஓர் அமைச்சரை அழைப்பதாக இருந்தோம். ஆனால் யாராவது ஒரு அமைச்சரை அழைத்துக் கௌரவித்தால், மற்ற அமைச்சர்கள் தங்களைக் கூப்பிடவில்லையே என்று வருந்தலாம். வேறு அரசியல்வாதிகளை அழைப்பதிலும் சிக்கல்கள் வரலாம். அதனால் தனக்கு 21 வயது முடிந்ததிலிருந்து பொதுத் தேர்தல், இடைத் தேர்தல், பஞ்சாயத்துத் தேர்தல் என்று ஒரு தேர்தல் விடாமல் வாக்களித்து வந்திருக்கும் ஒரு எளிய மனிதரை முக்கிய விருந்தினராக அழைத்துக் கௌரவிக்க உத்தேசம்.''

''மு-மு-மு.வின் முழக்கம் என்று ஏதாவது உண்டா?''

''உலக முட்டாள்களே ஒன்றுபடுங்கள். இழப்பதற்கு உங்களிடம் முட்டாள்தனத்தைத் தவிர வேறு எதுவுமில்லை — இந்த கோஷம் எப்படி?

''ரொம்ப பொருத்தம்.''

''அப்படியானால் மு-மு-மு.வின் முதல் உறுப்பினராகச் சேர உங்களுக்குச் சம்மதம் தானே?'' என்றார் வ.மு.

நான் கொஞ்சம் யோசித்தேன்.

''யோசிக்காதீர்கள். முட்டாள்கள் யோசிக்கக் கூடாது.''

''சரி.''

''அப்படியானால் வருகிற சனிக் கிழமை காலை பத்து மணிக்கு என் வீட்டுக்கு வாருங்கள். அங்கேதான் துவக்க விழா'' என்று சொல்லி விடைபெற்றார் வனா முனா.

வனா முனா என்னை யோசிக்கக் கூடாது என்று சொன்னாலும் நான் அவர் சொன்னவற்றைத்தான் வெகு நேரம் யோசித்துக் கொண்டிருந்தேன்.

காலண்டரைப் பார்த்தேன். அடுத்த வாரம் சனிக் கிழமை.

அட அன்று ஏப்ரல் முதல் தேதி அல்லவா?

மு-மு-மு.வைத் துவக்க முட்டாள்கள் தினம்தான் சரி என்று அந்த நாளைத் தேர்ந்தெடுத்தாரா? அல்லது இந்த மு-மு-மு. சமாசாரமே என்னை ஏப்ரல் முட்டாளாக்குவதற்காகத் திரிக்கப்பட்ட கயிறா?

இரண்டில் எது உண்மையானாலும், வனா முனா என்னை ஒரு வனாமுனாவாக அதாவது வடிகட்டிய முட்டாளாக ஆக்கி விட்டார் என்பதை உணர்ந்தேன்.



''இளவரசிக்கு நடந்த சுயம்வரத்துல ஏதோ கலாட்டாவாமே....?''

''சந்தடி சாக்குல யாரோ சாராய சாம்ராஜ்ஜிய மன்னரும் வந்து கலந்து கொண்டாராம்....!''

— கடுவை. கோபால்சாமி.



''வாங்கின சட்டையை நீங்க திருப்பிக் கொடுக்க மாட்டீங்களாமே...?''

''சந்தேகம் இருந்தால் ஒரு தடவை கொடுத்துப் பாருங்களேன்!''

— கடுவை. கோபால்சாமி



''அந்த மருந்துக் கடைல இருக்கறவர், இதுக்கு முன்னாடி ஹோட்டல்ல சர்வரா இருந்தவர் போலிருக்கு...!''

''எதை வச்சுச் சொல்றே...?''

''அண்ணாக்கு ரெண்டு மாத்திரை, ஒரு ஊசி'ங்கறாரே...!''

— வி. சுந்தரராமன்

**பிரபஞ்சன்**

**கோ**கிலா அவ்வளவு அவசரமாக அழைத்ததன் காரணம் புரியாது, தவிப்போடு அவள் சொன்ன முகவரிக்குச் சென்ற கிருஷ்ணமூர்த்திக்கு, அவளையும் அவள் அமர்ந்திருந்த தோரணையையும் கண்டு சற்று எரிச்சலாகக் கூட இருந்தது. சிறப்பாகக் கல்யாணத்தை முடித்து, பெண்ணைப் புருஷன் வீட்டுக்கு அனுப்பி வைத்த பெண் வீட்டார் மாதிரி ஆசுவாசமாக அவள் அமர்ந்திருந்தாள்.

''என்ன, வருங்கால மாவட்டச் செயலாளர், வருங்கால எம்.எல்.ஏ., வருங்கால அமைச்சர் யோசித்தவாறு இருக்கிறார்?'' என்றாள் கோகிலா ஒரு நாடக பாவனையில். மனசில் இருந்ததைச் சொன்னான் கிருஷ்ணமூர்த்தி. கோகிலா சிரித்தாள். மேல் வரிசையில் சரியாக ஆறு பற்கள், வெள்ளித் துண்டங்களாக மினுங்க அவள் சிரிப்பது இன்னும் அழகாகத்தான் இருந்தது என்று எண்ணமிட்டான் அவன். மகிழ்ச்சிக்கும் துன்பத்துக்கும் வயதாவதில்லையே!



''வாழ்க்கை அனுபவம் அற்ற இளைஞர் எவ்வாறு சிந்திப்பாரோ, அப்படியேதான் நீங்களும் சிந்திக்கிறீர்கள்.''

''என்ன சொல்கிறீர்கள்?''

''பின் என்ன. கல்யாணம் முடிந்தது என்று பெண் வீட்டார் ஆசுவாசமாக அமர முடியாது, கிருஷ்ணமூர்த்தி. அவர்களின் கவலையே அப்புறம்தான் தொடங்குகிறது. யாரோ ஒருவனுக்கு, அவன் குலம் கோத்திரம், வசதி, வருமானத்தை மட்டுமே கணக்கில் கொண்டு, பெண்ணைக் கட்டிக் கொடுத்தனுப்பியிருக்கிறோமே, அவன் அவளைக் கண் கலங்காமல் வைத்துக் காப்பாற்றுவானா என்கிற திகில் அப்புறம்தான் பெண்ணைப் பெற்றவர்களுக்கு ஏற்படுகிறது...''

கோகிலா சொன்னதை அவன் ஒப்புக் கொண்டான். சின்னஞ் சிறு விஷயம் முதல் பெரிய விஷயம் வரைக்கும், அனைத்தையும் பற்றி எப்படித் தெளிவாகச் சிந்தித்துக் கருத்து வைத்திருக்கிறாள் அவள் என்கிற பிரமிப்பே அவனுக்கு ஏற்பட்டது.

''அது சரி கோகிலா. வருங்கால மாவட்டச் செயலாளர், அது, இது என்றெல்லாம் சொல்கிறீர்களே, என்ன சங்கதி?''

''எல்லாம் எதிர் காலத்தில் உங்கள் தலைக்கு வரப் போகும் மணிமுடிகளைச் சொல்கிறேன். மணி முடியை, மணிமுடியாகவே கொள்வீர்களா, அல்லது முள் முடி ஆக்கிக் கொள்வீர்களா என்பது உங்கள் கையில்தான் இருக்கிறது. முதல்வர் வைத்திருக்கிற பரீட்சையில் நீங்கள் பாஸ் செய்வீர்களா இல்லையா, என்பதைப் பொறுத்தது அது.''

''பரீட்சை?''

''ஆமாம். விலைவாசி உயர்வு எதிர்ப்புப் பேரணியை நீங்கள் எவ்வாறு வெற்றிகரமாக்குகிறீர்கள் என்பதைப் பொறுத்தது அது. அதுதான் அவர் உங்களுக்கு வைத்திருக்கிற பரீட்சை.''

சட்டெனக் கவலை வந்து அப்பிக் கொண்டது அவனுக்கு. கோகிலா அவனை ஆராய்வது மாதிரி நோக்கி விட்டுச் சிரித்தபடி சொன்னாள்.

''கவலைப்படாதீர்கள். நான் எதற்கு

# சுக போகத் தீவுகள்

12



[redacted]

இருக்கிறேன். நான் உங்களுடன் இருப்பேன். இருக்கும்படி எனக்குக் கட்டளையும் இருக்கிறது'' என்றபடி பிரீப்—கேஸ் ஒன்றை எடுத்து அவன் முன் வைத்தான்.

''இது என்ன?''

''சக்தி! பாதாளம் மட்டும் பாய்கிற பணம். இந்தப் பணத்தைக் கொண்டுதான் நீங்கள் பேரணியை நடத்தப் போகிறீர்கள். ராமசாமி இன்னும் சில நிமிஷங்களில் வந்து விடுவார். இருவரும் கிளம்புகிறீர்கள் — பணத்தோடு. தமிழகம் முழுக்கப் பயணம் செய்கிறீர்கள். அதாவது பறக்கிறீர்கள். மழை மாதிரி இந்தப் பணத்தைத் தூவுகிறீர்

[redacted]

கள். அப்புறம் நீங்களே பார்ப்பீர்கள். செத்த பிணம் கூட இதன் வாசனை பட்டதும் எழுந்து நிற்பதை.''

பேச்சொழிந்து போயிற்று கிருஷ்ணமூர்த்திக்கு. கோகிலா கேட்டாள்:

''மாமா எப்படி இருக்கிறார்?''

''ஆங்... அதைத்தான் சொல்ல நினைத்தேன். ஒரு மாதிரியாக இருக்கிறார். என்னையும் அந்நியன் போல் பாவிக்கிறார்.''

''அப்படித்தான் இருப்பார். அவர் பயத்தில் உழல்கிறார்.''

''பயமா?''

''அவர் பீடத்தில் உங்களை ஏற்றி வைக்

கிறாரே. முதல்வர். பயம் வராமல் இருக் குமா?''

''மாமா என்ன தப்பு செய்தார்?''

''உங்கள் மாமா, அப்பாவி கிராம ஜனங்களை ஏமாற்றி நிலம் வாங்கி, ஒன்றுக்குப் பத்தாக அந்நிய மூலதனக் கம்பெனிக்கு விற்றுக் கோடி கோடியாகப் பணம் பண்ணினார் என்று ஒரு தமிழ்ப் பத்திரிகையாளர் எழுதியிருக்கிறார். ஆகவே, அவரைத் தன் பக்கத்தில் தெரியும்படி நெருக்கமாக வைத்துக் கொள்ள விரும்பவில்லை, முதல்வர்.''

அவன் அதிர்ச்சி அடைந்தான். இது என்ன விபரீதம்?

''கோகிலா. நடந்தது அனைத்தும் முதல்வரின் ஒப்புதலின் பேரில்தானே நடந்தது?''

''அதற்கு என்ன சாட்சி வைத்திருக்கிறீர்கள்? முதல்வர், ஒரு பெரிய கட்சியின் தலைவர். ஆறு கோடி மக்களின் முதல்வர். அவரைச் சுற்றி ஆயிரம் பேர் அவர் பெயரைச் சொல்லித் தவறு செய்யலாம். அதற்கெல்லாம் அவர் எப்படிப் பொறுப்பேற்பார்?''

''என்ன இப்படிச் சொல்கிறீர்கள்? அந்தத் தவறில் நானும்தானே பங்கேற்று இருக்கிறேன். அந்தப் பத்திரிகையாளர் நந்தன் அவர் கட்டுரையில் என்னையும் அல்லவா சேர்த்துத் தாக்கியிருக்கிறார்?'' பதைபதைப்புடன் சொன்னான் கிருஷ்ணமூர்த்தி.

''உங்களுக்கு அதனால் என்ன லாபம்? உங்களுக்குச் செப்புக் காசு அதில் பங்கில்லை என்பது முதல்வருக்குத் தெரியாதா? தவிரவும், ஏதாவது ஒரு கறை நம் மேல் ஒட்டிக் கொண்டுதான் இருக்கும். பத்திரிகையாளர்கள் சொல்வதையெல்லாம் ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ளாதீர்கள். நில பேர ஊழலை எடுத்துச் சொன்ன நந்தனை முதல்வர் கவனித்துக் கொள்வார். நாளைக் காலை முதல்வர் பத்திரிகையாளர்களைச் சந்திக்கிறார்.''

''எதற்காம்?''

மத்திய அரசு நம் மாநிலத்திடம் கொண்டுள்ள மாற்றாந்தாய் மனப்பான்மையைக் காட்டமாகச் சாடப் போகிறார் முதல்வர். அதே சமயம் தமிழக மக்கள் தங்கள் உணர்வை வெளியிட நடத்த இருக்கும் பேரணிக்குத் தன் தார்மீக ஆதரவையும் அளிக்க இருக்கிறார் முதல்வர்.''

''கோகிலா. மக்கள் இந்தப் போராட்டத்தை ஆதரிப்பார்களா?'' என்றான் கிருஷ்ணமூர்த்தி தயக்கத்துடன்.

''மக்களை நீங்கள் நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும், கிருஷ்ணமூர்த்தி! மக்களின் நாடி நரம்புகளின் உணர்வோட்டத்தைப் புரிந்து கொண்டவன்தான் நல்ல அரசியல்வாதியாக விளங்க முடியும். 'நல்ல' என்றால் மகாத்மா காந்தி மாதிரி அல்ல. வெற்றிகரமான அரசியல்வாதிகளைச் சொல்கிறேன். என்ன கேட்டீர்கள்? மக்களா? அவர்களுக்கு நம்மைப் பற்றியோ, மத்திய அரசுக் கொள்கையைப் பற்றியோ என்ன கவலை இருக்க முடியும், கிருஷ்ணமூர்த்தி? அவர்களுக்கு அவர்களின் கவலையே மலை போல் குவிந்து கிடக்கிறதே! அவர்களுக்குத் தங்கள் பிரச்னைகளில் இருந்து தப்பிக்க ஒரு வடிகால் வேண்டும். நம் போராட்டங்கள் அவர்களுக்கு வடிகால். நாலு மணி நேரம் வெயிலில் வறுபட்டு, ஒழிக, ஒழிக என்று கத்திக் கொண்டு போனால், அவர்களுக்கும் 'டென்ஷன்' நீங்கி நிம்மதி ஏற்படுகிறது. அரசியல்வாதிகளுக்கும் லாபம் இருக்கிறது.

கிருஷ்ணமூர்த்தி, கண்களை மூடிக் கொண்டு அமர்ந்திருந்தான்.

''அப்படியென்றால், மக்களுக்கு நம்மைப் பற்றிய கவலை இல்லை என்கிறீர்களா?''

''நமக்கு அவர்களைப் பற்றிக் கவலை இருக்கிறதா, என்ன?''

ராமசாமி அதே சமயம் அங்கு தோன்றினார். அரசியல்வாதிகளுக்கே உரிய அதீத வெள்ளை வேஷ்டியும், சட்டையும், மடித்துப் போட்ட துண்டுமாக அவர் இருந்தார்.

''ஆகா. தம்பி, நம்ம ஏரியாவுக்குப் புதுசு. நீங்கதான் பழக்கப்படுத்தணும்'' என்று கோகிலாவிடம் சொன்னவர் கறைபடிந்த மஞ்சள் பற்களைக் காட்டிச் சிரித்தார்.

ஒரு வாடகைக் காரில் கிருஷ்ணமூர்த்தியும் ராமசாமியும் பயணம் செய்து கொண்டிருந்தார்கள்.

''சார்... முதலில் நாம் எங்கு போகிறோம்?'' என்றான் கிருஷ்ணமூர்த்தி ராமசாமியைப் பார்த்து.

''முதலில் என் வீட்டுக்கு. நாம் வீடு திரும்ப நாலைஞ்சு நாள் ஆகும் அண்ணே! வீட்டுப் பொம்பளைகளுக்குக் கொஞ்சம் பணத்தைப் போட்டு விட்டுப் போனால் தானே நல்லது?''

முதலில் கே. கே. நகரில் இருந்த அவர் வீட்டுக்குச் சென்றார்கள் அவர்கள். ஐயாயிரம் ரூபாயைப் பெட்டியில் இருந்து எடுத்து அவர் வீட்டில் கொடுத்தார். அடுத்ததாக, கோடம்பாக்கம் சென்றார்கள். அடுக்காக, மூன்று வீடுகளைக் கொண்ட ஒரு போர்ஷனில் அவர்கள் நுழைந்தார்கள். ஒரு வீட்டின் முன் நின்று கதவைத் தட்டினார், ராமசாமி.

சற்றேறக்குறைய இருபது வயதும், மாநிறம், கட்டுறுதி கொண்ட உடம்பும், கொண்டவளாக ஒரு பெண் கதவைத் திறந்தாள். ராமசாமியைக் கண்டவுடன் பரிச்சயமான ஒரு புன்னகையைத் தவழ விட்டு, பிறகு கிருஷ்ணமூர்த்தியைக் கண்டதும்,

**அறுபதா? அரைக் கட்டணம்தான்!**

பெங்களூர் நகரப் போக்குவரத்துப் பேருந்துகளில் பயணம் செய்பவர்களுக்கு அறுபது வயதுக்கு மேலிருந்தால் அவர்களிடமிருந்து அரைக்கட்டணமே வசூலிக்கப்படுகிறது. இதற்கான அனுமதிச்

வினாக்குறி முகத்தில் தோன்ற நின்றாள் அவள்.

''நம்ம சிநேகிதரு. கட்சிக்காரர்தான். தலைவருக்கு ரொம்ப நெருக்கமானவரு. தெய்வநாயகம் மச்சினன்.''

அவள் அவனைப் பார்த்து ''உள்ளே வாங்க'' என்று விட்டு நகர்ந்தாள். உள்ளே பிரம்பு பின்னிய இரண்டு நாற்காலிகளே இருந்தன. ஆளுக்கொன்றாக அதில் அமர்ந்து கொண்டார்கள். ராமசாமி அவன் கையில் இருந்த பெட்டியை வாங்கி, ஒரு நூறு ரூபாய்க் கற்றையில் இருந்து கொஞ்சம் பணத்தைப் பிய்த்து எடுத்தார்.

''அண்ணே! ஒரு ஐயாயிரம் எடுத்துக்கறேன்'' என்றபடி, பணத்தை எண்ணி அவள் கையில் கொடுத்தார். அந்தப் பெண் அந்தப் பணத்தைக் கை நீட்டி வாங்கிக் கொண்டாள்.

''பார்வதி... வீட்டுச் செலவுக்கு வச்சுக்கோ. நான் இன்னும் ரெண்டு மூன்று நாளைக்கு இங்க வர முடியாது. இன்னா...?''

''சரி, சாப்டுட்டுப் போக முடியாதா? வெரால் கெண்டை குழம்பு வச்சிருக்கேன். இன்னிக்கு இங்கே வருவீங்கன்னு நெனைச்சேன்.''

''இணத்துத் தண்ணி, நீ! வெள்ளமா கொண்டு போயிடும், உன்னை'' என்று விட்டுக் கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்து, ''என்ன, சொல்றீங்க, அண்ணே?'' என்றார் ராமசாமி.

கிருஷ்ணமூர்த்திக்கு இரண்டு விதங்களில் அருவருப்பாய் இருந்தது. ஒன்று, ராமசாமி என்கிற சுமார் ஐம்பது வயதுக்காரர் தன்னை 'அண்ணே' என்று அழைப்பது. இரண்டாவது, அந்தப் பெண்ணின் கண்ணும், அதன் பாஷையும்.

அவர்கள் புறப்பட்டுக் காரில் வந்து அமர்ந்தார்கள்.

''சார்... இந்தப் பத்தாயிரம் ரூபாயையும் எந்த வகையில் கணக்கு எழுதுவது?'' என்றான் கிருஷ்ணமூர்த்தி.

ராமசாமி, ஏதோ ஹாஸ்யத்தைக் கேட்ட மாதிரி பகபகவென்று சிரித்தார்.

''அண்ணே! இதுக்கெல்லாம் கணக்கு ஏது அண்ணே? யாரு உங்களைக் கணக்கு கேட்கப் போறாங்க? காரியம் சுத்தமா நடக்கணும். நடந்துட்டா, பணத்தைப் பற்றி ஞாபகமே வராது யாருக்கும். தவிரவும், இதுக்கெல்லாம் கணக்கு எளுதப்படாதுங்க. இந்தப் பணமே கணக்கில் வராத பணமுங்க. கொடுத்தவனும் கணக்கில் வைக்காதவன். வாங்கிய கையும் கணக்கு இல்லாதது. செலவு செய்யற நாமும் கணக்கு வச்சுக்கப் படாதுங்க... நீங்க எவ்வளவோ படிக்க வேண்டியிருக்கு, அண்ணே.''

''போகிற வழியில் ஒரு பெரிய பெட்டிக் கடையில் வண்டியை நிறுத்தப்பா'' என்றார் ராமசாமி, டிரைவரிடம்.

பாண்டிபஜாரில், ஒரு கடை முன் வண்டியை நிறுத்தினான் டிரைவர். ஐந்து பாக்கெட் '555' சிகரெட் வாங்கி அடுக்கிக் கொண்டார் ராமசாமி. அதற்கு அவர் டிரைவரிடம் இரண்டு நூறு ரூபாயைக் கொடுத்ததைப் பார்த்தான் கிருஷ்ணமூர்த்தி. மீதிச் சில்லறையை அவன் திருப்பித் தராததையும், ராமசாமியும் திருப்பிக் கேட்காததையும் நினைத்துக் கொண்டான் அவன்.

அடுத்தபடியாக நகரின் பெரிய துணிக் கடையின் முன் வண்டியை நிறுத்தச் சொன்னார் ராமசாமி.

''ஊருக்குப் போகிறோம், அல்லவா? கொஞ்சம் மாற்றுத் துணி வாங்கிக்குவோம், அண்ணே'' என்றார் அவர்.

மிகவும் உயர்ந்த தரத்தில் இரண்டு டஜன் ஜட்டியும், பனியனும், பன்னிரண்டு டெரி காட்டன் வேஷ்டியும், பன்னிரண்டு அரைக் கை ரெடிமேட் சட்டைகளும் வாங்கினார் அவர். கிருஷ்ணமூர்த்திக்கும் மிக உயர்ந்த பேண்ட்களும், சட்டைகளும், உள்ளாடைகளும் பன்னிரண்டு ஜதை வாங்கினார், அவர்.

மிக நவீன மாதிரிகளிலும், அழகிய வடிவிலும் தன் முன் வந்து விழும் சட்டைகளையும், பேண்ட்களையும் பார்க்கையில் அவனால் மறுக்க முடியவில்லை.

''அடுத்து எங்கு போகிறோம்?''

''...ஹோட்டலில் அறை போடுகிறோம்'' — அவர் ஒரு நட்சத்திர ஹோட்டலைக் குறிப்பிட்டார். ''குளித்துச் சாப்பிடுகிறோம். கட்சி முக்கியஸ்தர்களைப் போன் பண்ணி 'சூட்'டுக்கே வரவழைத்துப் பேசி விடுவோம்'' என்று மடமடவென்று சொல்லிக் கொண்டு போனார் அவர்.

அதுகாறும் சேர்த்து வைத்திருந்த அத்தனை நெறிமுறைகளையும், அந்த இரவில் தான் இழக்கப் போவதை அறியாது அவருடன், ஊசி வழி நூலாகப் பின் தொடர்ந்தான் கிருஷ்ணமூர்த்தி.

(தொடரும்)

சீட்டைப் பேருந்து அலுவலகத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம். அந்தச் சீட்டில் உங்களுடைய போட்டோவை ஒட்டியிருக்க வேண்டும்!

— எம். கே. நாராயணன்





# தென்றல் சுடும்

ஏராளமான சொத்துக்கு ஏக வாரிசாய், இரண்டு குழந்தைகளுக்குத் தாயான இளம் விதவையாய் இருந்த ஒரு பெண்ணை ஏமாற்றி, அவளைக் கொலை செய்ய முயன்ற ஒரு சதிக் கூட்டத்தைத் தென்றலாய் இருந்த அந்தப் பெண் எப்படிச் சுட்டெரித்தாள் என்பது கதை.

கன்னத்திலே கரிக்கோடு போல் ஒரு கோர வடு, சற்றே நீட்டிய முன் பற்கள் இல்லாமலே கூட ராதிகாவால் பூரண அனுதாபத்தைப் பெற்றிருக்க முடியும். பாசமிக்க தாயாய், 'தூரி தூரி துமக்க தூரி...' என்று தன் குழந்தைகளோடு குழந்தையாய் இருந்து ஆடிப் பாடிக் களிக்கும் அந்தப் பாந்தம்; சொத்தையும் சொந்த மக்களையும் பாதுகாப்பதற்கு அவர் மறுமணம் செய்து கொள்வதே உரிய மார்க்கம் என்று ஒரே கோழி அமுக்காய் அமுக்கும் போது அப்பாவித்தனமாய்த் தடுமாறி, நம்பி அந்த ஏற்பாட்டுக்கு இணங்கிப் படு குழியில் விழும் வெகுளித்தனம் — இவை கலா பருவத்தில் கணிசமான ஐயோ பாவத்தைச் சம்பாதித்துக் கொடுத்து விடுகின்றன என்றால் —

கலா, மேகலா ஆன பிறகு அந்த அழுத்தமான, ஆழமான, ஆவேசங்கள்! முதலை வாயிலிருந்து மீண்டு கரையில் ஒதுங்கியவர் தேங்கியிருந்த நீரிலே தன் முக தரிசனம் செய்ததும் வீரிட்டுத் துடிக்கிறாரே, ஒரு நூல் பிசகியிருந்தால் மிகையாகிப் போயிருக்கும். செமை உலுக்கல். வேறு பல கட்டங்களிலும் ராதிகா முத்திரை பதித்திருக்கிறார். ஆனால் ஒன்று — ராதா ரவியை நாய்ச் சங்கிலியில் விறிட்டு, நிழல்கள் ரவியைச் சவுக்கடியில் சாய்த்து ரௌடித்தனம் பண்ணும் போது — என்னதான் பெண்மை பொங்கியது என்றாலும் — கொஞ்சம் தரம் தாழ்ந்து போகிற மாதிரி தெரிகிறது.

நிழல்கள் ரவி படு கச்சிதம். தொழிலாளர் வேலை நிறுத்தப் பிரச்னையைச் சமாளிக்கும் விதம், நீச்சல் குளத்தில் குழந்தைகளைக் கவர்ந்து இழுக்கும் இதம், மியூஸிகல் சேர் போட்டியில் ராதிகாவுக்கு விட்டுக் கொடுத்து முறுவல் காட்டும் சுத்தம் — அத்தனையையும் போலி போலி என்று காட்டியிருக்கிறார். அது சரி, இத்தனை திட்டமிட்ட வில்லன் சொத்திலேதான் தனக்குக் குறி என்பதை வக்கீலிடம் அத்தனை பச்சையாய்க் காட்டலாமோ?

எஸ். எஸ். சந்திரன் — மனோரமாவுக்குத் தண்ணீர் தெளித்து விட்டு அவர்கள் இஷ்டத்துக்குச் சேட்டை பண்ணிக் கிச்சு கிச்சு மூட்ட லைசன்ஸ் கொடுத்து விட்ட மாதிரி இருக்கிறது. சிரித்தால் சிரியுங்கள்; விட்டால் விடுங்கள்.

ராதா ரவி இயன்ற அளவுக்குத் தந்தையை நகல் எடுத்திருக்கிறார். மூக்குப் பொடி சமாசாரம் அவருக்கு ஒட்டாத அருவருப்பு. ஏதோ அரசியல் குத்தல் செய்வது போல், 'என் பேர் பாஸ்கர் ராவ். இந்த அளவுக்குக் கூடச் சுருட்டாட்டா எப்படி?' என்கிற மாதிரி பேசுவது காலத்துக்குப் பொருந்தாக் கிளவி.

கவர்ச்சி அபிலாஷா நல்ல காரெக்டர். இறுதியில் ராதிகாவுக்கு வைத்த குறியில் குறுக்கிட்டுத் தான் பலியாவது அவரது அழுக்கைத் துடைக்கும் காட்சி.

அந்த மலையருவிச் சாரல், எஸ்டேட் பச்சைப் பசேல், வண்ண மலர்த் தோட்ட அழகின் சிரிப்பு, பின் வெளிச்சம் வெட்டும் கலை நுணுக்கம் — லோகநாத் காமெரா, மேல் வரிசைக்குப் போகிறது.

சும்மா சொல்லக் கூடாது. கலைஞர், காலத்தையொட்டி இறங்கி வந்திருப்பதென்னவோ உண்மைதான். ஆனால் உணர்ச்சி வசப்படும் உச்சக் கட்டங்களில் அந்த நாள் ஞாபகம் நெஞ்சிலே வந்து விடுகிறது. எஸ்டேட்டில் வில்லனை மடக்கி, ராதிகா தன் நிலை விளக்கம் தருகிறாரே அந்த நீண்ட நெடிய வசனத்தின் நடையும் சரி; மூச்சிரைக்க அவர் பேசும் முறையும் சரி — பராசக்தியை நினைத்துக் கன்னத்தில் போட்டுக் கொள்ளச் செய்கிறது. ஐ மீன், காட்சி மறைந்து, கலைஞர் தெரிகிறார்!

— பி. எஸ். எஸ்.



# காதலின் ஆழம்

உலகப் புகழ் பெற்ற பிரெஞ்சு நாவலாசிரியரான விக்டர் ஹியூகோவின் மகள் ஏதல், ஓர் ஏழை இளைஞனைக் காதலித்தாள். அதனால் பெற்றோர் அவளது காதலுக்குத் தடை விதித்து, அவனைப் பார்க்கவோ, பேசவோ கூடாது என்றனர். தந்தையிடம் உள்ள மரியாதையால், அவர் வார்த்தைக்குப் பணிந்தாள் ஏதல். ஆனால் காதலன் மீது கொண்ட அன்பு, அவளை வேறு யாருடனும் பேச விடவில்லை. "அவருடன் பேசக்கூடாதென்றால், இனி நான் வேறு யாருடனும் பேசவே மாட்டேன்" என்று சபதம் செய்தாள். அதன்படியே, அறுபத்தி ஐந்து ஆண்டுகள் வாயிருந்தும் ஊமையாக வாழ்ந்தாள். இடையே விக்டர் ஹியூகோ இறந்த பொழுதும், தந்தையின் பிணத்தைப் பார்த்து மௌனமாகக் கண்ணீர் வடித்தாளேயன்றி, மறந்தும் வாயைத் திறந்து விடவில்லை.

— குமாரி. வீ. ரெங்கம்.



# நேர்கொண்ட பார்வை

விஜயசேகரன்

அம்மாவின் கடிதம் இன்று காலையில் வந்தது. அவருடைய சாய்வு எழுத்திலேயே விலாசம் எழுதப்பட்டிருந்தது. சுவாமியின் அம்மாவுக்குப் படிப்பு அனுபவம் அதிகம். அதனால் எழுத நினைத்ததைச் சரியாக எழுதி விடுவார். அறுபது வயது ஒரு பொருட்டுக் கிடையாது. திருத்தமாக எழுதியிருந்தாள்.

சாமினாதனுக்கு அநேக ஆசீர்வாதம்.

க்ஷேமம். அங்கு லட்சுமி, ரவிக்குட்டி, சித்ராக் குட்டி க்ஷேமத்தைத் தெரியப்படுத்தவும். எனக்குக் கடந்த இரண்டு மாதங்களாகவே புத்தகம் எல்லாம் சரியாகப் படிக்க முடிவதில்லை. தலைவலி மண்டையைப் பிளக்கிறது. டாக்டரிடம் போகச் சொல்லி உன் அண்ணன் இருபது ரூபாய் கொடுத்து விட்டான்.

அவரும் பரிசோதனை செய்து முந்நூறு ரூபாய் செலவு ஆகும் என்று சொன்னார். கண்ணாடி போட்டுக் கொள்ள வேண்டுமாம். நான் பேசாமல் வந்து விட்டேன். பெரியவனிடம் கேட்கத் தயக்கமாக உள்ளது.

கிட்டவே இருந்து அவனுடைய சிரமங்களை அறிந்து கொள்வதால் வாய் வர மாட்டேன்கிறது. அவசியம் நீ ஒரு முந்நூறு ரூபாய் எனக்கு அனுப்பி வை. இரண்டு மாதம் ஆயிற்று நான் புத்தகம் எல்லாம் படித்து...

நிறைய தொடர்கள் அப்படியே நிற்கின்றன. யாரையாவது படித்துக் காட்டச் சொல்லத் தயக்கமாக இருக்கிறது! கூடவே, நாமே படிச்சு ரசிக்கிற சந்தோஷம் கிடைக்காதுன்னு நினைக்கிறேன்! இதை உன்னோட அண்ணனால் புரிஞ்சுக்க முடியாது! இந்தக் கடிதம் கூட கஷ்டப்பட்டுத்தான் எழுதியிருக்கிறேன்.

இப்படிக்கு,
அம்மா.

நீலநிற உறையை, சுவாமி மடித்துப் பையில் வைத்துக் கொண்டான். கடிதம் கிடைத்தது மாதக் கடைசியில்... அதோடு அவனுடைய கணக்கு வழக்குகள் அப்படியொன்றும் மகிழ்ச்சியானதாக இல்லை.

இரண்டு குழந்தைகள். அவர்களுடைய படிப்பு, மற்றும் குடும்பச் செலவுகள். வண்டிக்குப் பெட்ரோல்... பிடித்தம் கழித்து வருகிற ஆயிரத்து எழுநூறு சம்பளத்திற்கு இரண்டாயிரத்து எழுநூறு செலவுகள் இருந்தன.

டைரியை எடுத்தான். இருப்பில் இருந்த உள்நாட்டு உறையை எடுத்து, நான்கு வரிகள் எழுதினான்.

அம்மாவுக்கு,

கடிதம் கிடைத்தது. இங்கு உன் சின்னப் பேரனைப் பள்ளியில் சேர்த்த வகையில் இந்த மாதம் ஏகமாய்ச் செலவு. அதோடு போன மாதம் அலுவலகம் மூலமாக டூர் அழைத்துப் போனார்கள். அதற்கு வேறு இந்த மாதம் பிடித்துக் கொள்வார்கள்.

ஆகையால் மிகவும் சிரமமாக உள்ளது.

எதற்கும் முதல் தேதிக்கு மேல் முயற்சி செய்து முடிந்தால் அனுப்புகிறேன்.

இப்படிக்கு,
சுவாமி நாதன்.

கையெழுத்திட்டான். உறையை ஒட்டிக் கொண்டான்.

தபால் அலுவலகம் ஒரு கிலோ மீட்டரில் இருந்தது. வெயிலும் அவ்வளவாக இல்லை. நடந்தால் பரவாயில்லை என்று தோன்றி யது. உடையை மாற்றிக் கொண்டான்.

துணி துவைத்துக் கொண்டிருந்த மனைவியிடம் "கடை வீதி மட்டும் போயிட்டு வந்துடறேன்!" என்றான். வண்டியைத் தவிர்த்து நடக்க ஆரம்பித்தான்.

இப்படி பதின்மூன்று வருடங்களுக்கு முன் அம்மாவோடு அவன் நடந்தது உண்டு. கடைசியாக இந்த வேலைக்கு அழைப்பு வந்தது. அம்மா, வீட்டில் இருந்த இரண்டு பழைய காலத்துப் பித்தளைத் தவலை களைத் தூக்கி இடுப்பில் ஒன்றும் கையில் ஒன்றுமாக வைத்துக் கொண்டாள். கிளம்பி னாள்.

"எங்கம்மா?"

"வேலைக்குப் போறதுக்கு — பஸ் செல வுக்கு உனக்குப் பணம் வேண்டாமா?"

"இது வேலையில்லை; நேர்முகத் தேர் வுக்கு வரச் சொல்லியிருக்காங்க!"

"தெரியறது; அதுக்கும் போக வேண் டாமா?"

"அதுக்கு?"

"ரெண்டு தவலையும் வச்சு போலீஸ்கார மாமிகிட்ட நாத்தம்பது ரூபாய் வாங்கிட்டு வரேன்!"

"நான் இந்த இண்டர்வியூக்கே போகலே. உன் சிரமத்தைப் பார்த்தா தாங்கலம்மா! இப்பத்தான் அண்ணனை டிரெயினிங்கு அனுப்பிச்சே!"

"அப்படியெல்லாம் பேசாதப்பா. நல்ல படியா போயிட்டு வா. வேலை கிடைச் சுடும்! வேண்டியதை எடுத்து வச்சுக்கோ..." பேசியபடி நடந்தாள்.

கூடவே இருபது வயது சுவாமினாதன் நடந்தான். இரண்டு மைல் நடை அம்மா வுக்கு அலுக்கவில்லை. போலீஸ்கார மாமி சுவாமினாதனுடைய அம்மாவைப் பார்த்த வுடன், "வாடி சகுந்தலா!" என்றாள். இட் லிக்கு அரைத்துக் கொண்டிருந்தாள்.

"என்னடி இந்த நேரத்துல?"

அம்மா பதில் சொல்லாமல் "விடுங்க மாமி நான் அரைக்கிறேன்!" என்று கல்லைப் பிடித்துக் கொண்டாள்.

"இதுதான் உன் இரண்டாவது பிள் ளையா?"

"ஆமாம் வேலைக்குத் தபால் வந்திருக்கு. காலைல பத்து மணிக்குப் போகணும். கைல நாலணா இல்ல... இந்த இரண்டு தவலை களை வச்சுக்கிட்டு ஒரு நாத்தி ஐம்பது குடுங்க. மூணு மாசத்துல மீட்டுக்கறேன்!" சுவாமினாதனின் அம்மா அரைத்துக் கொண்டே பேசினாள்.

"உன் பெரிய பையனுக்குச் சம்பளம் வரது இல்லையா?"

"இன்னும் ஒன்பது மாசம் டிரையினிங். அது முடிஞ்சு வந்த பிறகுதான் சம்பளம். அது மட்டும் நாமதான் செலவு செய்ய ணும்!"

போலீஸ்கார மாமி வில்லம் விரையம் என்று போக்கு காட்டினாள். அரிசி மாவை எடுத்துக் கொண்டாள். உளுந்தைக் களைந்து போட்டாள். அதையும் சுவாமியின் அம்மா அரைத்து முடித்தாள்.

"இந்தா இந்த பீர்க்கங்காய்த் தோல் வதக்கினது — அப்படியே அரைச்சுடு... தொட்டுக்க இல்லன்னா சாப்பாடு இறங்க மாட்டேங்குது."

மறுப்பு சொல்லாமல் அம்மா அதையும் அரைத்து, தட்டில் வழித்து வைத்தாள்.

இரவு மணி எட்டாகிய நேரத்தில், தகர டப்பாவைத் திறந்து, நூற்றி இருபது ரூபாய் கொடுத்தாள். ரூபாய்க்குப் பத்து பைசா வட்டி என்றாள்.

பணத்தை அம்மா புடவையில் முடிந்து



கொண்டான். சுவாமினாதனுடன் வெளியே வந்தாள். கடைவீதியில் சோப்பு வாங்கினாள். மீதித் தொகையை மகனிடம் கொடுத்தாள். பணத்தை வாங்கும் போது அம்மாவின் கையைச் சிறு குழந்தை போல் பிடித்துக் கொண்டான். கண்கள் கலங்கின.

''சாமி, என்ன இது! மனுஷனாய்ப் பொறந்தாச்சு. சகலமும் பட்டுத்தான் ஆகணும்... நாளைக்கே உனக்கு வேலை கிடைச்சுட்டா எல்லாம் சரியாயிடும். தவலைகளை மீட்டுடலாம்.. வா'' என்று சமாதானம் செய்தாள். மீண்டும் இரண்டு மைல் நடை....

ராத்திரி வந்து பரபரவென அவனுடைய ஆடைகளைச் சோப்பு போட்டுத் துவைத்தாள் அதிகாலை நான்கு மணிக்கு எழுப்பினாள். பாதி ஈரத்துடன் இருந்த உடைகளைத் தொட்டுப் பார்த்தாள்.

''அய்ய இன்னும் கொஞ்சம் காயணுமே... காயணுமே...'' என்றபடி எடுத்துக் கொடுத்தாள். சுவாமினாதன் அம்மாவிடம் ஆசி பெற்றுக் கிளம்பினான்.

அம்மாவின் தீர்க்கமான முடிவு அவனுக்கு வெற்றியைக்கொடுத்தது. அன்றைய நேர்முகத் தேர்வில் முதலாவதாக வந்தான். கணிசமான சம்பளத்தில் வேலை கிடைத்தது.

**வை**த்த தவலைகளை மீட்டாயிற்று. அண்ணன் பயிற்சி முடிந்து பணியில் அமர்ந்தான். இரண்டு வருட இடைவெளியில் இருவருக்கும் திருமணம் செய்து வைத்தாள்.

பணி நிமித்தம் இவன் பெங்களூரில் இருக்க வேண்டியதாய் இருந்தது. அம்மாவுக்கு இந்தக் குளிர் ஏற்கவில்லை.

பெரிய மகனுடன் இருக்க முடிவு செய்து தங்கி விட்டாள். மருமகளும் வேலை செய்வதால் அம்மாவின் உதவி அவர்களுக்கும் தேவைப்பட்டது. வருடத்துக்கு இரண்டு முறை பெங்களூர் வந்து போவாள்.

சுவாமினாதனுடைய அண்ணனுக்கு மூன்று குழந்தைகள். படிப்புச் செலவு அதிகம் என்று அண்ணன் புலம்புவார். அதோடு ''விக்கற விலைவாசியில அஞ்சாறு பேர் சாப்பிடணுமே'' என்பார்.

**''எ**ன்ன சுவாமி வண்டி எங்கே?''

''இருக்குங்க வீட்ல!''

''பின்ன நடக்கறீங்க? ''

''சும்மாத்தான் ஒரு தபால் போடணும் அதான்!'' — சொன்னபடி நடந்தான். நினைவுகள் தடுமாறின.

'அம்மாவுக்குத் தன்னம்பிக்கை அதிகம். அதோடு புத்தகப் பைத்தியம். ஒரு வார இதழ், மாத இதழ் எதையும் விடாமல் படிப்பாள்.

ஒருவேளை இந்தப் புத்தகப் படிப்புத் தான் சாதாரண அந்தக் காலத்து நாலாம் வகுப்பு அம்மாவுக்குத் தன்னம்பிக்கையையும் திட சிந்தனையையும் காட்டியதோ என்னவோ?!

எதிலும் பதட்டம் இருக்காது. நீண்ட யோசனைக்குப் பின்பே முடிவு செய்வாள். தடுமாற்றம் இருக்காது. நேர்முகத் தேர்வுக்கு அழைப்பு வந்தவுடன் அக்கம் பக்கம் பணம் புரட்ட முடியாது என்பதை எவ்வளவு சீக்கிரம் உணர்ந்து செயல்பட்டாள்....! அவசரம் புரிந்து அன்றைக்குத் தவலையைத் தூக்கிக் கொண்டு கிளம்பினாளே...!

ஏன் அந்தத் திட சிந்தனை நமக்கு வரவில்லை? எதிலும் ஒரு குழப்பம்! ஏழைமை தான் அம்மாவுக்கு உறுதியைக் கொடுத்ததா? என்னுடைய படிப்பு அறிவு,இரண்டாயிரம் சம்பளம் — எனக்குத் தடுமாற்றத்தை உண்டாக்குகிறதா?

— யோசித்தபடி நடந்தான்.

இத்தனை வருடங்களில் அம்மா எப்பொழுதும் இப்படி எழுதிக் கேட்டது இல்லை. இந்த முந்நூறு ரூபாயை அம்மா அண்ணனிடம் கேட்கத் தயங்குகிறாள்.

மேலும் இதை எனக்கு எழுதக் காரணம், நான் புத்தகங்களை விரும்பிப் படிக்கும் வகை என்பதுதானோ?

தேடிப் பிடித்துப் படிக்கும் பழக்கம் சின்ன வயதில் இருந்தே அம்மாவிடம் இருந்து சுவாமினாதனுக்கு ஒட்டிக் கொண்டது. அண்ணனுக்கு இது பிடிக்காது. சுவாமினாதனை அடிக்கடி திட்டுவான். ஆனால் அம்மாவைக் கேட்க மாட்டான்.

அம்மா கேட்ட முந்நூறு ரூபாய் இப்பொழுது இல்லை என்பதை எழுதிக் கொண்டு வந்த உறையைச் சட்டைப் பையில் இருந்து எடுத்தான்.

மளிகைக் கடைக்காரர் கூப்பிட்டார். ''அட வாங்க வாங்க...'' நிழல் வேண்டி பெஞ்சில் சென்று அமர்ந்தான். மதிய



''உங்க உடம்பிலே இரத்தம் பற்றாக்குறையா இருக்கு. இரும்புச் சத்து பற்றாக் குறையா இருக்கு. கால்ஷியம் பற்றாக் குறையா இருக்கு. உடனே கவனித்து டிரீட்மெண்ட் எடுத்தாகணும்...''

''ஒண்ணும் செய்யறதுக்கில்லை டாக்டர்! எல்லாவற்றையும் விட நிதிப் பற்றாக்குறை கடுமையா இருக்கு...!''

— பெ. கலாசாமி.

அடுத்த இதழில்...





## பெண்களுக்கு இட ஒதுக்கீடு தேவையா..?

-கலந்துரையாடல்

---

வெயில். கடையில் கூட்டம் இல்லை. வேலை ஆட்களும் தெரியவில்லை.

''எங்க ஒருத்தரையும் காணோம்... முருகன் எங்கே?'' முருகன் உதவியாள். சுவாமினாதனைப் பார்த்தவுடன் டீ வாங்க ஓடுபவன்.

''முருகன்தான் இல்லே. அவங்க அம்மா கீழே விழுந்திடுச்சாம். ஆஸ்பத்திரிக்குக் கூட்டிட்டுப் போகணும்னு ராத்திரியே சொல்லிட்டுப் போயிட்டான்.''

பதின்மூன்று வயது முருகன். அவனுக்குச் சம்பளம் நூறு ரூபாய். அவனைப் படிக்க வைக்காமல் மளிகைக் கடைக்கு அனுப்பும் அவனுடைய அம்மாவுக்கு உடல்நிலை சரியில்லை என்றவுடன் விடுப்பு எடுத்துக் கொண்டு கிளம்பி விட்டான்!

'ஆனால் நான் இரண்டாயிரம் சம்பளம் வாங்குகிறேன். கடைசியாய் இந்த வேலைக்குக் கிளம்பிய பொழுது கூடத் தவலைகளைத் தூக்கிக் கொண்டு திரிந்த என் அம்மாவுக்கு... பணம் அனுப்ப இப்போது சௌகரியப் படாது என்று எழுதிய ஐம்பது காசு உறையை எடுத்துக் கொண்டு வந்திருக்கிறேன்!'

''இன்னிக்குச் சனிக் கிழமை லீவுங்களா சார்!''

''ஆமாம் செட்டியார்.''

''இன்னிக்கு வியாபாரம் கூட சுமாரத் தான் இருக்கும் அதனாலதான். அவனும் ஒருநாள் போயிட்டு வரட்டும்னு அனுப்பிச் சேன். தபால் போட வந்தீங்களா?''

''ஆமாங்க!''

''டீ சாப்பிடுங்க!''

''வேண்டாங்க. வெயில்!''

''..................''

செட்டியாரையும் மளிகைக் கடைப் பொருட்களையும் பார்த்தபடி யோசித்தான் சுவாமினாதன்.

''ஏங்க?''

''சொல்லுங்க சார்!''

''பணம் ஒரு முந்நூறு குடுங்க! சம்பளம் வந்தவுடனே தரேன்!''

''எவ்வளவுங்க?''

''முந்நூறுங்க!''

மளிகைக் கடைக்காரர் பத்து ரூபாய் காகிதங்களை எண்ணிக் கொடுத்தார். இன்னும் நான்கு நாட்களே முதல் தேதிக்கு என்பது அவருக்குத் தெரியும். சொன்ன தேதியில் வரும் என்பதும் அவருடைய நம்பிக்கை.

சுவாமினாதன் சாப்பிட்டு விட்டு வந்த இன்னொரு கடைப் பையனை ஒரு மணி ஆர்டர் பாரம் வாங்கி வரச் சொன்னான். வந்த அட்டையில் அம்மாவின் பெயர் எழுதி விலாசம் எழுதினான்.

அம்மாவுக்கு,

நீங்கள் கேட்டபடி பணம் அனுப்பியுள்ளேன். கண்ணாடி போட்டுக் கொள்ளவும்.

இப்படிக்கு,

சுவாமினாதன் கையெழுத்திட்டான்.

அதையும் பணத்தையும் அந்தச் சிறுவனிடமே கொடுத்தனுப்பினான். பத்து நிமிடங்களில் ரசீது வந்தது. நான்காக மடித்துப் பையில் வைத்துக் கொண்டான்.

''ஏங்க தபால் போடலையா?'' என்று கேட்ட மளிகைக் கடைக்காரரிடம், ''இல்லைங்க'' என்று சொன்னபடி எழுந்து கொண்டான்.

''அப்ப வரட்டுங்களா?'' என்றபடி வெயிலுக்கு வந்தான். கடுமையான அக்னியையும் மீறி ஒருவித குளிர்ச்சியை அவனால் உணர முடிந்தது.



●● டி.வி.யில், அதிகம் பேர் ரசித்துப் பார்க்கும் நிகழ்ச்சி எது என்று கேட்டால் — 'ஒளியும் ஒலியும்' என்று பதில் வந்து கொண்டிருந்தது. இப்போது அது அழியும் ஒழியும் ஆகிவிட்டது! ஆமாம் சார்... கழுதை தேய்ந்து கட்டெறும்பான கதையாய் முடிந்து விட்டது. 'ஒளியும் ஒலியும்' நிகழ்ச்சிக்கு இருந்து வந்த வரவேற்பு. புதுப் பாடல்களைத் தவிர, ஒளிபரப்பும் அனைத்துப் பழைய பாடல்களும் 'ஆக்ஷன்—ரீப்ளே' தான். (அதாவது மறு ஒளிபரப்பு!) பழைய பாடல்கள் இட்டத்தட்ட முப்பது வைத்திருக்கின்றனர். திருப்பித் திருப்பி அந்த பாடல்களையே போட்டு நம் கழுத்தில் 'பிளேட்' போடுகிறார்கள்! எத்தனை பழைய — அட்டகாசப் பாடல்கள் இருக்கின்றன. அவை ஏன் இவர்களது கண்களுக்குத் தென்படுவதில்லை? ரேடியோவைப் பார்த்தாவது கற்றுக் கொள்ளட்டும்!

— கே. என் ஸ்ரீனிவாஸ், கொரட்டூர்.

●● டி.வி.யில் உத்தர ராமாயணம் தொடங்கியிருந்தது. அந்தச் சமயத்தில் என் மனைவி "ஒரு குடம் தண்ணீர் ஒரு ரூபாயாமே? இதுவரை நான் தண்ணீர் எடுக்கக் குடத்துடன் கிளம்பியதில்லை. இப்போது நானே குடத்துடன் தண்ணீர் எடுக்கக் கிளம்பும் வேளை வந்ததே" என்று ஆதங்கப் பட்டாள். அப்போது டி.வி.யில் வால்மீகி ஆசிரமத்தில் குடத்துடன் சீதை நின்று கொண்டிருந்தாள். அதைப் பார்த்த என் மகன், "இதோ பாரம்மா, தண்ணீர்ப் பஞ்ச காலத்தில் ஆனானப்பட்ட சீதையே குடத்துடன் கிளம்பி விட்டார்! நீ எல்லாம் எந்த மூலை? சீதையை விடவா நீ பெரியவள்?" என்றானே பார்க்கலாம்!

— டி. கே. சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்.

●● பிராந்திய விருது பெற்ற மாநிலத் திரைப் படங்களின் ஒளிபரப்பின் போது ஆங்கில மொழி பெயர்ப்பில் எழுத்துப் பிழைகள் ஏராளம். லேட்டஸ்ட் உதாரணம்: துலாபாரம் — மலையாளப் படத்தில் அட்வகேட் அச்சுதன் நாயர் குமாஸ்தாவிடம், "கட்சிக்காரர் வந்தாயிற்றா?" என்று கேட்க, டி.வி.யில் காட்டப்பட்ட ஆங்கில மொழிபெயர்ப்பு: "Has the 'Patti' come?" (Party பாட்டி ஆகி விட்டது!) நிகழ்ச்சிகளின் தரத்தை உயர்த்துவது இருக்கட்டும்; இந்த எழுத்துப் பிழைகளுக்காவது முடிவு கட்டக் கூடாதா?

— 'மோகன்ராஜ்,' பெங்களூர்.

●● என் கன்னட சிநேகிதி பெங்களூர் தொலைக் காட்சி நிலையத்தில் பணியாற்றிக் கொண்டிருந்தாள். நிலைய நிகழ்ச்சிக்காக அவளோடு நானும் அருகிலிருந்த கிராமத்திற்குச் சென்றேன். கிராமத்தின் குடிசை ஒன்றில் ஐந்தாறு குழந்தைகளுக்குத் தாயான ஒரு பெண்மணியை என் சிநேகிதி பேட்டி கண்டாள். குடிகாரக் கணவரைப் பற்றி, குழந்தைகளுடன் தான் ஜீவனம் செய்யக் கஷ்டப்படுவதைப் பற்றி அவள் கூறியது மனத்தை நெகிழ வைத்தது.

பேட்டி முடிந்தது. இருவரும் புறப்பட்டோம். அப்போது அந்தப் பெண்மணி, "என்னங்க வந்துட்டுச் சும்மா போறீங்களே?" என்றாள்.

நான் சட்டென, "உங்களுக்கு எதுக்குங்க சிரமம்?" என்று கேட்டு விட்டு என் தோழியின் காதில் "இல்லையாடி, பாவம்! ஏற்கெனவே ஏழை, நமக்கு வேறே டீ, காப்பின்னு அந்தம்மா சிரமப்படணுமா?" என கிசுகிசுத்தேன்.

என் சிநேகிதியும், "ஆமாங்க. சிரமப் படாதீங்க, வரோம்" என்று கை குவித்தாள்.

அவளோ, "சும்மா போகாதீங்கம்மா.. இத்தினி நாழி என்னைப் பேச வைச்சீங்க... ஒரு பத்தோ இருபதோ கொடுத்துட்டுப்

# 'ஒளியும் ஒலியும்' ஒழியும் அழியும்!

போங்கம்மா... அதான் நியாயம்'' என்று ஒரு போடு போட்டாளே, பார்க்கலாம்! அசத்தி விட்டாள் எங்களை!

— என். பிரபா, பெங்களூர்.

●● காலை டெல்லி நிகழ்ச்சியில் ''ஹலோ, ஹலோ'' (சிரி! சிரி!) என்ற பகுதியில் ஒரு நகைச்சுவை:

ஒரு கிளினிக். உள்ளே நுழையும் ஒவ்வொரு பேஷண்டையும் டாக்டர் சட்டையைக் கழற்றச் சொல்லி வரிசையாக் நிற்கச் சொன்னார்:

ஒரு காக்கிச் சட்டைக்காரர்: ''டாக்டர் வந்து... நான்...''

டாக்டர்: போய் லைனில் நில்! பேசாதே! சட்டையைக் கழற்றி லைனில் நில்!

அடுத்து ஓர் ஆள் வந்தார். ''சார்... பல் வலிக்கிறது!''

டாக்டர்: ''சரி, சரி. சட்டையைக் கழட்டு. அங்கே போய் லைனில் நில்!

பல்வலிக்காரரும், காக்கிச் சட்டைக்காரரும் பேசிக் கொள்கிறார்கள்.

பல்வலிக்காரர்: இந்த டாக்டர் என்ன இப்படி செய்கிறார்? பல்வலிதான். அதற்குப் போய் எதற்குச் சட்டையைக் கழற்றி லைனில் நிற்க வைத்து விட்டார்?

காக்கிச் சட்டைக்காரர்: (ஆறாத குறையாக) நீராவது பரவாயில்லை! நான் தந்தி கொடுக்க வந்தவனய்யா! என்னைப் போய் இப்படி நிற்க வைத்து விட்டார்!

— என். கே. மாணிக்கம், ஈரோடு.

●● புதிய வீட்டுக்குப் பெயிண்ட் அடித்த போது எல்லா கலர் பெயிண்ட்டிலும் கொஞ்சம் கொஞ்சம் மீதம் இருந்தது. வீணாகத்தானே போகும் என்று எண்ணி, ஆண்டனா பைப்பில் கலர் கலராக அடித்து வைத்தோம். பைப் துருப்பிடிக்காமலாவது இருக்குமே!

பக்கத்து வீட்டுக்காரர் விசாரித்த போது கிண்டலாக, ''இப்படி கலர் கலராக அடித்தால்தான் கலர் டீவியில் கலர் நன்றாக வரும்'' என்றோம்.

அடுத்த நாள் அவரும் தமது வீட்டு




ஆண்டனா பைப்பில் கலர் கலராகப் பெயிண்டு அடித்துக் கொண்டிருந்ததைப் பார்க்கச் சிரிப்பாக இருந்தது!

— பி. சுப்புலெட்சுமி, கமுதி.

●● கொசுவர்த்திச் சுருள் விளம்பரமொன்றில், ''வானம் பொழிகிறது, பூமி விளைகிறது, கொசுக்களை அடக்கு!'' என்று வீரபாண்டியக் கட்டபொம்மன் சொல்வது போல் காட்டப்படுகிறது. இது போன்ற செயல்களால் டீ.வி. நிலையமும், விளம்பரப் பொருளும் பொது மக்களின் வெறுப்புக்கு ஆளாகின்றன. இனியாவது இதுபோன்ற விளம்பரங்களைத் தவிர்ப்பார்களா?

— வி. சீனிவாசன், பின்னத்தூர்.

●● ஆஸ்திரேலியாவில் ப்ரிஸ்பெய்னில் நடந்த ''எக்ஸ்போ 88'' காண நான், என் கணவர், குழந்தைகளோடு சென்றிருந்தேன். அங்கு வீடியோ கேமரா வாடகைக்குக் கிடைத்தது. புத்தகத்தில் படித்து எப்படி அதைக் கையாள்வது என்று தெரிந்து கொண்டு, துப்பாக்கி ஏந்திய ராணுவ வீரன் போல, வீடியோவும் தோளுமாக மனசில் பாலுமகேந்திரா என்ற நினைப்போடு எக்ஸ்போவைப் படம் பிடித்தேன்.

ஊருக்குத் திரும்பியதும் அக்காள் குடும்பம், அண்ணன் குடும்பம், அக்கம் பக்கத்து ஜனங்கள் சகிதம் கேசட்டைப் போட்டுப் பார்த்தோம். நன்றாகத்தான் இருந்தது. நான் பெருமையோடு ''இதெல்லாம் நான்தான் 'ஷூட்' பண்ணினேன்'' என்றேன். அரை மணி நேரம் ஆகியிருக்கும். திடீரென்று ஸ்கிரீனில் ஒரே கால்கள் மயம்! 'பேண்ட் போட்ட', 'மிடி போட்ட', 'ஆப் டிராயர் போட்ட', 'ஒன்றுமே போடாத' ஆண், பெண், இள வயது, வயதானவர், பேதமின்றி தொடையிலிருந்து, ஆடுசதை வரையிலான விதவிதமான கால்கள் நடந்து கொண்டிருந்தன!

எல்லோரும் ''கொல்'' என்று சிரித்து விட்டார்கள். ''இது கூட நீதான் 'ஷூட்' பண்ணியா? '' என்ற கேள்வி. எனக்கோ பயங்கர அதிர்ச்சி! இது எப்படி நேர்ந்தது? நான் இம்மாதிரி படம் எடுக்கவில்லையே...?

எக்ஸ்போவைச் சுற்றிப் பார்த்த களைப்பில் சிறிது நேரம் உட்காரலாம் என்று எண்ணி, காலரியின் கீழ்ப் படியில் அமர்ந்திருந்த நினைவு வந்தது. அப்போது காமிரா 'ஆன்'லேயே இருந்திருக்கிறது! நான் நடந்த போது தலைகளைப் படம் பிடித்த காமிரா, நான் உட்கார்ந்திருந்த போது கால்களைப் படம் பிடித்திருக்கிறது!

எதிர்பாராமல் நடந்து என் மானத்தை வாங்கினாலும், இன்றும் நாங்களும், மற்றவர்களும் ரசித்துப் பார்க்கும் ஒரு நகைச்சுவை நாடகமாக அந்தக் காட்சி இருந்து வருகிறது!

— ஜெயக்குமாரி ஷண்முகராஜ், கும்பகோணம்.

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — VI
ராஜ்மோகன் காந்தி

# தி.மு.க. பக்கம் நீண்ட நேசக்கரம்



**ரா**ஜாஜி சென்னை மாகாணத்தின் முதலமைச்சராக இருந்த இரண்டு தருணங்களிலும் அவரை எதிர்த்துச் சிறைபுகத் தயாராக இருந்தவர் அண்ணாதுரை. அவருடைய கண்களுக்கு, திராவிடர்கள் மீது மறைமுகமாக மேலாதிக்கத்தைத் தொடர முயற்சி செய்யும் ஓர் ஆரியனாக ஸி. ஆர். தென்பட்டார். ஸி. ஆரும் திராவிடக் கழகத்தையும் அதிலிருந்து பிரிந்து வந்த தி. மு. க. வையும் விமர்சித்தது உண்டு. 'ஆரியர் — திராவிடர் என்னும் ஒரு மாயையான பிரிவினையின் அடிப்படையில் அந்தக் கட்சிகள் வெறுப்பை வளர்ப்பதையே கொள்கையாகக் கொண்டுள்ளன' என்று கூறியது உண்டு. 1950 மத்தியில் இவ்வாறு தமது கருத்தை வெளியிட்ட ஸி. ஆர்., இன்னமும் அதே அபிப்பிராயத்தைத்தான் கொண்டிருந்தார். 1961 ஏப்ரலில் கூட தி. மு. க. வையும் தி. க. வையும் 'இனத் துவேஷத்துக்குப் பிறந்த குழந்தைகள்' என்று வர்ணித்திருந்தார். ஆனால் இப்போது — 1962ல் — காங்கிரஸை முறியடிப்பதே அவருடைய பிரதான நோக்கமாக இருந்தது. எனவே தமிழ் நாட்டில் காங்கிரஸுக்கு முக்கிய எதிரியாகிய திராவிட முன்னேற்றக் கழகத்துக்கு ஆதரவளிக்க வேண்டியிருந்தது. கூடுமானால் தி. மு. க. தனது தீவிரவாதத்தைக் கைவிடச் செய்ய முயற்சி எடுக்க வேண்டும்; ஆனால் எக்காரணம் கொண்டும் அதனைப் பகைத்துக் கொள்ள முடியாது!

தி. மு. க.வுக்கு நேசக் கரம் நீட்டிய போது ஸி. ஆருக்கு தைரியம் அளித்த ஒரு விஷயம், அதன் தலைவராகிய ஸி. என். அண்ணாதுரையின் குண இயல்புகள். அண்ணாதுரையிடம் மக்கள் பெருமளவில் கவரப்பட்டார்கள்; அவரது செல்வாக்கு மேலும் மேலும் வளர்ந்து வந்தது என்பது ஒருபுறமிருக்க, அண்ணாதுரை விசாலமான மனமுடையவராகவும் புதிய சிந்தனைகளையும் கருத்துக்களையும் ஏற்று எடை போட்டுப் பார்க்கத் தயங்காதவராகவும் இருந்தார். ராஜாஜிக்கு அண்ணா இப்போது தேவைப்பட்டார் என்றாலும் ராஜாஜியால் தி. மு. க. புதிய கௌரவத்தைத் பெற முடியும். அதன் மூலம், தமிழ் நாட்டில் ஆட்சியைப் பிடித்து விடலாம் என்ற அவர்கள் கனவு நனவாகவும் கூடும். எனவே ராஜாஜியும் அண்ணாவும் முழுமையான ஒரு தேர்தல் ஒப்பந்தத்தை உருவாக்கிக் கொள்ள முடியாமல் போனாலும் ஒருவரை ஒருவர் சிநேகப் பான்மையுடன் விமர்சிக்க ஆரம்பித்தார்கள். தனிப்பட்ட முறையிலும் பகிரங்கமாகப் பொது மேடைகளிலும் 'சுதந்திரமான திராவிட நாடு கொள்கையை அண்ணா கைவிட வேண்டும்' என்று ஸி. ஆர். வற்புறுத்தத் தொடங்கினார். தெற்கேயும் சரி, வடக்கேயும் சரி, தேசிய உணர்வுள்ளவர்களிடையில் பேசும்போதெல்லாம்

ஸி. ஆர்., 'தி. மு. க. வானது அவர்கள் அஞ்சுவது போல் ஒரு பிரிவினைப் பூதம் அல்ல' என்றும் 'அவர்கள் பேச்சுதான் கொஞ்சம் கடுமையாகத் தொனிக்கிறது' என்றும் வாதாடினார். 1962 இறுதியில் தான் பிரிவினைக் கொள்கையைத் தி.மு.க. அதிகார பூர்வமாகக் கைவிட்டது என்றாலும் இந்த முடிவுக்குக் கழகம் வந்து விடும் என்பதற்கான அறிகுறிகள் அதற்குப் பல காலம் முன்பாகவே தெரிய ஆரம்பித்தன. தி. மு. க.வின் லட்சியங்களில் ஏற்பட்ட இந்த மிக முக்கியமான, ஆரோக்கியமான மாற்றத்துக்கு ஸி. ஆர். பெருமளவில் காரணமாக இருந்தார்.

தேர்தலுக்கு முன்னால் ஸி. ஆர். 83 வயதைக் கடந்து விட்டார் என்றாலும் களத்தில் இறங்கி நெடுந்தூரப் பயணங்களை மேற்கொண்டார். பஞ்சாபில் ஒரு ஊரில் அவரை வரவேற்றுப் பேசிய ஒரு சீக்கியர், எண்பத்து மூன்று வயதிலும் ராஜாஜிக்கு இருந்த சக்திக்கும் சிந்தனைத் தெளிவுக்கும் காரணத்தைக் கண்டுபிடிக்க முயன்று, ''இளம் வயதிலேயே மனைவியை இழந்து விட்ட ராஜாஜி, நெடுங்காலமாகக் கடும் பிரும்மச்சர்யத்தைக் கடைப்பிடித்து வருவதுதான் காரணமாக இருக்க வேண்டும்'' என்று குறிப்பிட்டார். ஒரு கணம் யோசனையில் ஆழ்ந்து போன ஸி. ஆர்., இந்தச் சுற்றுப் பயணத்தின் போது உடன் வந்திருந்த சதாசிவம் பக்கம் திரும்பி, ''அவர் கூறுகிற காரணம் தவறானதாகத் தோன்றவில்லை'' என்றார்.

ஸி. ஆரின் சிந்தனை மட்டுமின்றி பேச்சும் மிகத் தெளிவாக இருந்தது. ஆந்திரா சுற்றுப் பயணத்தின் போது ஒரு பத்திரிகையாளர் எழுதினார்: ''ராஜாஜியின் பேச்சைக் கேட்க என்னுடன் என் மகளும் வந்திருந்தாள். அவள் எட்டாவது வகுப்பு படிக்கிறாள். ஆங்கிலத்தில் எப்போதுமே அதிக மார்க் வாங்கியது கிடையாது. ஆனாலும் ஸி. ஆரின் பேச்சை வார்த்தை விடாமல் தன்னால் புரிந்து கொள்ள முடிந்ததாகக் கூறினாள். அவர் சொன்னதையெல்லாம் தெலுங்கில் அவள் திருப்பிச் சொன்ன போது கருத்துப் பிழை எதையும் என்னால் காண முடியவில்லை.''

''காங்கிரஸின் சோஷலிஸம் தனி நபர் சுதந்திரங்களை நசுக்குகிறது'' என்றார் ஸி. ஆர். ''கம்யூனிஸ்ட்டுகளுக்கும் காங்கிரஸுக்கும் இடையில் கொள்கை வித்தியாசம் ஏதும் கிடையாது; அவர்களிடையே நடக்கும் தேர்தல் போட்டி பள்ளிக்கூட ஓட்டப் பந்தயம் போன்றதுதான்! பர்மிட் — லைசென்ஸ் — கண்ட்ரோல் — கோட்டா முறையானது காங்கிரஸ் கட்சியின் பணக்கார நண்பர்களை மேலும் பணக்காரர்களாக்குகிறது; ஏழைகளை மேலும் ஏழைகளாக்குகிறது.''

தேர்தல் சீர்திருத்தங்கள் பற்றியும் நிறையப் பேசவும் எழுதவும் செய்தார் ஸி. ஆர். இன்றையத் தேர்தல் முறை, பணம் படைத்தவர்களே வெற்றி பெற உதவுகிறது என்றும் தேர்தல் முறை எளிமைப்படுத்தப்பட்டுப் பண நாயகத்துக்கு இடமில்லாமல் செய்து விட வேண்டும் என்றும் கூறி, அதற்கு விரிவான திட்டங்களையும் வெளியிட்டார். மேலும், 'தேர்தல் சமயத்தில் ஆட்சியில் உள்ளவர்களின் பலவிதமான அதிகார துஷ்பிரயோகங்களைத் தவிர்க்க, தேர்தலுக்கு ஆறு மாதங்கள் முன்னதாக ஜனாதிபதி ஆட்சி கொண்டு வரப்பட வேண்டும்' என்றார். ஆனால் ஆளும் கட்சியின் பிரதான நோக்கம் மீண்டும் பதவிக்கு வருவதாக இருந்ததேயொழிய, தேர்தல் சீர்திருத்தங்களைப் பற்றி யார் கவலைப்பட்டார்கள்? ஸி. ஆரின் யோசனைகள் செவிடன் காதில் ஊதிய சங்காக முடிந்தது.

''காங்கிரஸுக்கு ஒரு பாடம் கற்பியுங்கள்; அதனைப் பலவீனப்படுத்துங்கள்'' என்பது 1962 தேர்தலுக்கு முன் ஸி. ஆர். கடைசியாக விடுத்த வேண்டுகோள். ஆனால் அவரும் அவரைப் போன்ற வேறு பலரும் விடுத்த கோரிக்கைகளை மக்கள் லட்சியம் செய்யவில்லை. 1957—ல் காங்கிரஸ் மொத்த வோட்டுக்களில் 46 சதவீதத்தைப் பெற்றிருந்தது எனில், இப்போது, 44.5 சதம் பெற்றிருந்தது. ரொம்பவும் குறைந்து போனதாகக் கூற முடியாது. நாடாளுமன்றத்திலும் பல்வேறு மாநில சட்டசபைகளிலும் காங்கிரஸ் வசதியான பெரும்பான்மை பலம் பெற்றிருந்தது. நாடாளுமன்ற வோட்டுக்களில் சுதந்திரக் கட்சிக்குக் கிடைத்தது எட்டு சதவீதமே. தேர்ந்தெடுக்கப்பட்டு எம்.பி. ஆனவர்கள் 25 பேர். காங்கிரஸுக்குக் கிடைத்த இடங்களோ 361. என். ஜி. ரங்கா தோல்வி கண்டார். பின்னால் ஒரு இடைத் தேர்தலில் நின்று வெற்றி பெற்றார். தமிழ் நாட்டிலும் சுதந்திரக் கட்சிக்கு ஏமாற்றமே. சட்டசபையில் ஒன்பது இடங்களே கிடைத்தன. தி. மு. க.வுக்கு ஐம்பது, என்றாலும் ஒரிஸ்ஸா, ராஜஸ்தான், குஜராத், பீகார் ஆகிய மாநிலங்களில் காங்கிரஸுக்குப் பிரதான எதிர்க் கட்சியாக விளங்கியது சுதந்திரக் கட்சியே!

ஆகக் கூடி காங்கிரஸ் கோட்டை தகர்க்கப்படவில்லை எனினும் பல இடங்களில் விரிசல் கண்டிருந்தது. புதிதாகத் தோன்றிய எதிரி, வீரத்துடன் போர் புரிந்திருந்தான்.

''எதிர்ப்புப் பணியைத் தொடர்ந்து நடத்துவேன்'' என்று ஸி. ஆர். ஒரு அமெரிக்க நிருபரிடம் சொன்னார். ''அடுத்த தேர்தலில் இன்னும் பலமான எதிர்க் கட்சிகளின் அணியை உருவாக்குவேன்!''

''அந்தத் தேர்தல் 1967ல் நடக்கும்'' என்று எழுதினார் அந்த அமெரிக்க நிருபர். ''அப்போது ராஜாஜிக்கு வயது 89 ஆக இருக்கும்!''

(தொடரும்)

# சேற்றில் மலர்ந்தவர்கள்

அந்தப் புதிய அமைச்சர் புன்முறுவல் பூக்கத் தமது ஆசனத்தில் அமர்ந்திருந்தார்.

அவரைச் சுற்றிலும் தொந்தி துவள, விரல்களில் வைர மோதிரங்கள் டாலடிக்க, ஐந்தாறு பணமுதலைகள். அவர்கள் புது மந்திரியை வாழ்த்திப் போட்ட ரோஜா மாலைகள் மந்திரியைப் போலவே புத்தம் புதிதாகச் சிரித்தன.

"நீங்க என்னை வாழ்த்திப் பாராட்டிப் பேசறது ஒரு பக்கம் இருக்கட்டும்... என்ன விஷயமா என்னைப் பார்க்க வந்திருக்கீங்கன்னு நான் தெரிஞ்சுக்கலாமா...?" என்றார் அமைச்சர்.

— இளம் அமைச்சரின் எளிமை தூய கதராடையில் மட்டுமல்ல; பேச்சிலும் இயல்பாய் நிரம்பி வந்தது.

"ஐயா... கோபிச்சுக்கப்படாது...! எங்க தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட எம்.எல்.ஏ. நீங்க...! எங்களோட நல்ல நேரம் மந்திரியாகவும் ஆகிட்டீங்க.. நம்ம ஊர்ப் பிரச்னை — குறிப்பா எங்களைப் போலுள்ளவங்க பிரச்னை பற்றி நீங்க அறியாததில்ல...! ஏன்னா, நீங்க கூட எங்களைப் போல் பாதிக்கப்பட்ட நபர்ல ஒருத்தர்தானே....?"

— பீடிகையுடன் பேசிய ஒரு வழுக்கைத் தலை, தன் முன் மண்டையை நைசாகத் தடவி விட்டுக் கொண்டே தங்கப் பல் தெரிய ஒரு மாதிரியாய்ச் சிரித்தபடி மற்றவர்களையும் பார்க்க, அனைவரும் பதிலுக்குச் சிரித்தனர்.

"சார்... இன்னைக்கு எனக்கு ஏகப்பட்ட புரோக்ராம் இருக்கு... சொல்ல வந்த விஷயத்தை நேரடியாச் சொல்லி முடியுங்க... உங்க பிரச்னையை நாள் கடத்தாம உடனே கவனிக்க முடியுமான்னு பதில் சொல்லிடறேன்...!"

— அவர் சொல்லி நிறுத்த, கூலிங் கிளாஸ் அணிந்த நாற்பது வயது மதிக்கத் தக்க ஒருவர் வாய் திறந்தார்.

"சார்... இது நீங்க அறியாத விஷயமில்லே... நாங்களெல்லோரும் நகரத்துல பெரிய புள்ளிங்க...! ஒவ்வொருத்தருக்கும் சொந்தமா 'ஃபைவ் ஸ்டார், த்ரீ ஸ்டார், 'ஏ' குரூப் ஹோட்டல்னு' ஏராளமா இருக்கு.. இதுல எப்பவும் 'சகஜமா' நடக்கிற பார்ட்டீங்க நடந்துட்டிருக்கும்... அதுக்குப் பெரிய இடைஞ்சலாயிருக்கான் இந்த எஸ். பி. கங்காதரன்...!"

— எஸ். பி.யின் பெயரைக் கடைசியில் அழுத்தந்திருத்தமாக உச்சரித்து விட்டு அமைச்சரின் முகத்தை உற்றுப் பார்த்தார் மிஸ்டர் கூலிங் கிளாஸ். அவர் முகத்தில் எந்த சலனமும் தெரியவில்லை.

"ம்... சொல்லுங்க..." — என்றார் அமைச்சர், அமைதியாக.

"என்ன சார் புரியாத மாதிரி கேட்கறீங்க...? போன தேர்தல்ல நம்ம தொகுதியில் நடந்த ஒரு சின்ன கலாட்டாவுக்கு நீங்கதான் மூல காரணம்னு சொல்லி உங்களைக் கைது செஞ்சாரே...! அந்த கங்காதரனைப் பத்தித்தான் சொல்றோம்...!"

— இடையில் புகுந்து அவருக்கு விளங்க வைக்க முனைந்தார் மற்றொருவர்.

"ம்... ம்... புரியுது... அதுக்கு என்ன இப்போ...? விஷயத்தைச் சீக்கிரமா சொல்லி முடியுங்க...!"

"சார்... உங்க எதிரிதான் எங்க எதிரி... அந்த கங்காதரன் பயல் நம்ம ஏரியாவிற்கு மாற்றலாகி வந்த ஒரு வருஷமா எங்களைப் போல முதலாளிகளால் தூங்க முடியலை... இராத்திரி ஒன்பது மணிக்கு மேலே ஹோட்டல்கள்ல 'பார்' நடத்தக் கூடாதுன்னு உத்தரவு போடறான்... அடிக்கடி 'ரெய்டு' பண்ணி எங்க வருமானத்தையே நாசமாக்கிட்டான்... எல்லோருக்கும் மாமூல் கொடுத்த மாதிரி இவனுக்கு ஒருபடி மேலா கொடுக்க நாங்க தயார். ஆனால் ஆள் மசிய மாட்டேன்றான்..."

— ஒருவர் 'பாய்ண்ட்' எடுத்துக் கொடுக்க அடுத்தவர் பிடித்துக் கொண்டார்.

"ஆமாம் சார்... அவனை நம்ம ஏரியாவுக்கு மாத்தினவுடனே முதல்ல அவன் கிட்ட அகப்பட்டவன் நான்தான் சார்... நைட்ல எப்பவும் 'காபரே டான்ஸ்' என்னோட ஹோட்டல்ல நடந்துட்டிருக்கும்... எல்லா அதிகாரிகளும் லஞ்சம் வாங்குகிற மாதிரி இவனும் வாங்கிக்குவான்னு நினைச்சுத்தான் அன்றைக்கும் 'ஷோ'வை நடத்திட்டிருந்தேன்...! படுபாவிப் பயல் அன்னைக்குத் திமர்னு உள்ளே நுழைஞ்சு அதிரடித் தாக்குதல் நடத்தினானே... நான்

கா. சு. வேலாயுதன்

கொடுத்த பணப் பெட்டியைக் கூடத் தூக்கி என் முகத்துலேயே எறிஞ்சுட்டு என்னைச் சந்தி சி ரி க் க வீதியில இழுத்துட்டுப் போனானே.... அப்பப்பா.... இ ப் ப டி யொருத்தனை வாழ்நாள்ல நாங்க போலீஸ் அதிகாரியா சந்திச்சதேயில்லை சார்.. அவனை உடனே ஏதாவது ஒரு காரணம் காட்டிச் சீட்டைக் கிழிச்சு வெளியே அனுப்பறது உங்க கையில்தான் சார் இருக்கு...!''

''ஆமாம்ங்க... அந்த இலாகா மந்திரி யான உங்களை விட்டா வேறே யார் சார் இதைச் செய்வாங்க...? அவனை அந்த வேலையை விட்டு நீக்க முடியாட்டாலும் பரவாயில்லை, வேறிடமாவது ட்ரான்ஸ்பர் செஞ்சுடுங்க... உங்களுக்குப் புண்ணியமாப் போகும்...!''

''மந்திரி சார்... இப்ப மட்டும் நீங்க இதைச் செய்துட்டா எங்க மாதிரி பொரு ளாதாரத்தின் உச்சியில் இருக்கிறவங்க பணத்தைக் கொண்டு வந்து உங்க காலடி யில் கொட்டோ – கொட்டுன்னு கொட்டு வாங்க... அதுக்கு அட்வான்ஸா... இதோ, எங்களோட பங்கு... பத்து லட்சம்... இதுலயிருக்கு...!''

— என்றபடி பட்டு வேஷ்டி தரையில் துவள எழுந்த வழுக்கைத் தலை, மேஜை மேல் வீற்றிருந்த சூட்கேஸைத் திறந்து காட்ட, உள்ளே புதுமணம் கமழப் புத்தம் புதிய கரன்ஸி நோட்டுக்கள்...

அமைச்சரின் முகத்தில் எந்தச் சலனமு மில்லை.

அப்போது –

இண்டர்காம் ஒலித்தது. மந்திரி எடுத்துப் பேசினார்.

''யாரு... எஸ். பி. கங்காதரனா...? ராஜினாமாக் கடிதம் அனுப்பிட்டாரா...? என்ன...அப்படியா...? சரி,அவரை உடனே இங்கே வரச் சொல்...!''

— என்று சொல்லி விட்டு ரிஸீவரை வைத்தவர் சிறிது நேரம் எதையோ யோசித் தார். பின்பு –

''ஹலோ சார்... கங்காதரனுக்கெதிரா அணி திரண்டிருக்கிற உங்களுக்கு ஒரு மகிழ்ச்சிச் செய்தி. உங்க எதிரி... அதுதான் கங்காதரன், தானே வலிய ராஜினா மாக் கடிதம் அனுப்பியிருக்கார்... சந்தோஷந் தானே...? அவரை இங்கே அனுப்பச் சொல்லியிருக்கேன்... அதனால் கொஞ்ச நேரம் வெளியே இருக்கீங்களா...?

— புன்முறுவல் மாறாது விஷயத்தைச் சொன்னார் மந்திரி.

''அப்படியா...? ''

''உண்மையாகவா...? '' என்று ஆச்சரி யக் கேள்விகளுடன் அவர்கள் அனைவரும் வெளியே நடந்தனர்.

ஏக முழக்கத்தோடு வெளியே வந்த அனைவரின் முகத்திலும் வெற்றிக் களிப்பு. எதிரே வந்த எஸ். பியைப் பார்த்து ஏளனப் புன்னகை புரிந்ததோடு மட்டுமல்லாது ஒரு வருக்கொருவர் சிரிப்பை உதட்டளவி லேயே பரிமாறிக் கொண்டனர். அவருக்கு ரத்தம் கொதித்தது. மீசை துடிக்க அவர் களைப் பார்த்தார். ஒன்றிரண்டு பேர் அவரின் சிவந்த விழிகளின் கோபப் பார்வைக்குப் பயப்படாமல் அசட்டுத்





"மன்னா! எந்தப் போரிலும் புறமுதுகு காட்டாமல் எப்படி இருக்க முடிந்தது உங்களால்?"

"பின்பக்கமாகவே ஓட வெகு நாட்களாகப் பிராக்டீஸ் செய்ததனால் தான்!"

— பாலகி.

---

துணிச்சலுடன் பார்த்தாலும் மற்றவர்கள் பழைய பயம் மாறாது நெளிந்தனர். சில நிமிஷந்தான் —

எஸ்.பி. பொங்கி வந்த கோபத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு அமைச்சர் அறையின் தானியங்கிக் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தார். ஆசனத்தில் அமர்ந்திருந்த அமைச்சரின் முன் வந்து 'அட்டென்ஷன்' பொஸிஷனில் நின்று ஒரு பெரிய சல்யூட் அடித்தவரை,

"வாங்க... எஸ்.பி. சார், வாங்க... உட்காருங்க...!" என்று வரவேற்றார் அமைச்சர். எதிரேயிருந்த இருக்கையை நோக்கிக் கை நீட்டினார். எஸ்.பி. அமரவில்லை.

"இது என்ன... திடீர்னு ராஜினாமாக் கடிதம்...? " — என்று கேட்டார். அதற்கும் எஸ்.பி. பதில் பேசவில்லை.

"எதற்காக இந்த ராஜினாமாக் கடிதம்னு உங்களால சொல்ல முடியுமா...? நம்ம கைது செஞ்ச ஒரு வேட்பாளர் மந்திரியாயிட்டானேன்னா...? இல்லே... இந்த மந்திரியானவன் உங்களைப் பழி வாங்கறதுக்கு முன்னாடி பதவிசா வி ல கி ட லாம்னா...? "

"நீங்க எப்படி எடுத்துட்டாலும் சரி சார்...! என்னை எஸ்.பி. போஸ்ட்லயிருந்து நீங்க நீக்கப் போறதா எனக்குத் தகவல் கிடைத்தது...! கண்ணியமா இருக்கிற ஒரு போலீஸ் அதிகாரி அந்தக் கண்ணியம் பறி போகாமல் காப்பாற்றப் பதவி விலகிடறது நல்லதில்லையா...? "

— மிடுக்கு மாறாமலே பதில் தந்த அவரின் குரலும் ஒரு சிங்கத்தின் கர்ஜனை போல் ஒலித்தது.

மந்திரி மெதுவாகச் சிரித்துக் கொண்டே எழுந்தார்.

"என்னங்க எஸ்.பி. சார்... நான் இவ்வளவு சின்னத்தனமா நடந்துக்குவேன்னு உங்களுக்கு யார் சொன்னது...? அப்படியே யாராவது சொன்னாலும் ஒரு மந்திரின்னா பழி வாங்குகிற குரூரப் புத்தியோடதான் நடந்துக்குவான்னு ஒரு நேர்மையான போலீஸ் அதிகாரியான நீங்களும் எப்படி நம்பலாம்...? இலஞ்சம், இலாவண்யம், அதிகார துஷ்பிரயோகம்னு ஊறிப் போன உங்க இலாகாவிலே நேர்மைக்காக உழைக்கிற நீங்க இருக்கிற மாதிரி ஏன் எங்களுள் சிலர் மாறுபட்டு இருக்கக் கூடாது...? "

— அவர் குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண்டே கேட்க, எஸ்.பி. பதில் பேசாது நின்றார்.

"என்ன சார் பதிலே பேச மாட்டேன் நீங்க...? ம்... இனி 'வரப் போற ஆட்சி எங்க கையில்தான்னு உறுதியா தெரிந்திருந்தும், எத்தனை எதிர்ப்பு வந்தும் தயங்காம, செல்வாக்கு மிக்க என் மேல் சட்டப்படி ஆக்ஷன் எடுத்த உங்க நேர்மையைக் கண்டு அப்பவே நான் அசந்து போனேன். அது மட்டுமில்லாமல் உங்களுக்கு எதிரா இருக்கிற சக்திகளே நீங்க எவ்வளவு நேர்மையானவர்ன்னு சொல்லாம சொல்லுச்சு.. அதனால்தான் நான் பதவியேற்றதும் முதல் வேலையா உங்களை எஸ். பி. பதவியிலிருந்து நீக்கிட்டு, ஒரு குறிப்பிட்ட வட்ட, மாவட்ட அளவில் இருந்துவந்த உங்க சேவை, மாநிலம் முழுக்கப் பயன்படட்டும்ன்னு இலஞ்ச ஒழிப்பு இலாகாவுல 'சீஃப் ஸ்பெஷல் ஆபீஸரா' நியமிக்க முடிவு செய்திருக்கேன்...! நீங்க என்னடான்னா இப்படி ராஜினாமாக் கடிதத்தோட...!"

— அவர் கூறி முடிக்கவில்லை. அவர் சொல்லுவதற்கெல்லாம் புருவத்தை உயர்த்திக் கொண்டே வந்த எஸ். பி. வியப்பின் எல்லைக்கே சென்று விட்டார்.

"சார்... நீங்க... என்ன சொல்றீங்க...? பதவி உயர்வா...? தாங்க்யூ சார்... தாங்க்யூ வெரி மச்.....!"

"என்ன...? நான் இப்படி செய்தது உங்களுக்கு ஆச்சர்யமா இருக்கா...? சார்... நீங்க, தேர்தல் சமயத்துல நடந்த ஒரு கலாட்டாவிற்குக் காரணமா என்னைக் கைது செஞ்சது உங்க பதவி அடிப்படையில் மட்டுமல்ல; கடமை அடிப்படையிலும் கூட...! அதே போலத்தான் இப்ப நானும்... ஒரு பதவியைப் பொறுப்பா ஏற்றுக்கிட்டிருக்கேன். அந்தப் பதவியின் கடமைகளை, செயல்பாடுகளை நீக்கமறச் செய்யத்தான் என்னை மக்கள் இந்த ஆட்சி எனும் மாமன்றத்துக்கு அனுப்பியிருக்காங்களேயொழிய, நான் பகையாளியாக் கருதற ஒவ்வொருத்தரையும் பழி தீர்த்துக்கவோ பண முதலைகளின் நீலிக் கண்ணீரைத் துடைச்சு விடவோ அல்ல....!

"...பை, இ...பை... வெளியே நீங்க உடனே 'கவனிக்க' வேண்டிய ஆளுங்க உங்களுக்காகக் காத்திட்டிருக்காங்க... அவங்க என்னைக் 'கவனிக்க'க் கொண்டு வந்த பணம் இங்கேயிருக்கு... உங்க உயர்ந்த சேவையை இப்போ இதிலிருந்தே துவக்குங்க...!"

ஒரு வித்தியாசமான 'மனிதனைப்' பார்த்த திருப்தியில் விறைப்பாக நின்று மீண்டும் ஒரு சல்யூட் அடித்தார் அந்த உயர் போலீஸ் அதிகாரி.

# பொன்மலர்



## ஏப்ரல் 1 முதல்

மாதமிருமுறையாக
மலர்கிறது

மாதமிருமுறை
விலை ரூ.2/-

இம்மலரில்.....

**ஜெயலலிதா, மூப்பனார் எதிர்காலம்?**
— அரசியல் ஆய்வு

**கலைஞரா? ரஜினியா?**
— புகைப்பட ஆர்வம்

**ஏப்ரல் மாத ராசிபலன்!!**

**ராமராஜன்-ரூபினி-8 வித்தியாசம்.**

**கே. பாலசந்தரின் குலதெய்வம்**
கொட்டூர் அங்காளபரமேஸ்வரி

**நஷ்டம் வராமல் தடுப்பது எப்படி?**

**இளையராஜாவுக்கு பாரதிராஜாவின் பரிசு**

**ஸ்பீக்கர் சொன்னவை?**

**கணவனா? மனைவியா?**
— பட்டிமன்றம்

தவிர
பேட்டிகள், போட்டிகள், சினிமா, ஸ்போர்ட்ஸ்

**இன்னும் பல**

69, வில்லேஜ் ரோடு, நுங்கம்பாக்கம், சென்னை-34.
போன்: 47 32 92.

* மு. செ. முருகேசன், குமாரபாளையம்.

? மதுரையிலும் மருங்காபுரியிலும் இரட்டை இலைகள் துளிர்த்தது கண்டு களித்தீரா? முகம் சுளித்தீரா?

! துளிர்த்தது கண்டு சந்தோஷம். ஆனால் வளருமா என்பதில்தான் சந்தேகம். இன்று தற்காத்துக் கொள்ள வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கும் அ. தி. மு. க. வும் அதன் தலைவர்களும் இந்த நிலையிலிருந்து மீண்டு, சிறந்த மாற்றுக் கொள்கைகள், திட்டங்களுடன் தி. மு. க.வுக்கு எதிர்க் கட்சியாகத் திறம்படச் செயல்பட்டால்தான் மதுரை மருங்காபுரி தீர்ப்பு அர்த்தமுள்ளதாகும்.

* க. இராஜசேகரன், பேரளம்.

? ஸ்வீடன் பத்திரிகையாளர் லக்கன் பாலுக்கு இந்திய அரசு விசா மறுத்துள்ளதே?

! ஆமாம் ஸார், ஏற்கெனவே முடை நாற்றமெடுத்துக் கொண்டிருக்கும் பீரங்கி ஊழலை இன்னும் கொஞ்சம் கிளறிப் பார்க்கிறேன் என்றால் அனுமதிக்க முடியுமா என்ன!

* எஸ். சஞ்சீவிதாஸ், புதுக்கோட்டை.

? நாயன்மார் நால்வரில் ஒருவரான திருநாவுக்கரசுக்கும் நால்வர் அணியில் ஒருவராக இருந்த திருநாவுக்கரசுக்கும் வேறுபாடு என்ன?

! சிவ சிவ! இப்படியொரு கேள்வியா? எம்பெருமானே சஞ்சீவி தாஸை மன்னியுங்கள்!

* ஜி. ராஜசேகர், வளையமாபுரம்.

? 'நெஞ்சில் குத்திவிட்டார் கருணாநிதி' என்கிறாரே டாக்டர் ராமதாஸ்?

! பிற்படுத்தப்பட்டவரில் மிகவும் பிற்படுத்தப்பட்டவர் என்பதாக ஒரு பிரிவினருக்கு முத்திரை குத்தப்பட்டிருப்பது என்னவோ உண்மை. ராமதாஸ் நெஞ்சில் கை வைத்துப் பார்த்தால் இதனால் வன்னியர்கள்தான் அதிகப் பலன் பெறுவர் என்பதை உணர்வார். பல அறிஞர்கள், பத்திரிகைகள் சுட்டிக்காட்டியிருப்பது போல் முதல்வரின் புதிய திட்டம் செயல்பட சில காலம் அவகாசம் அளித்து, நன்மை விளைகிறதா இல்லையா என்று பார்த்து விட்டுப் பிறகு ராமதாஸ் அடுத்த தமது செயல்பாட்டினை நிர்ணயிப்பது நல்லது.

* அடுத்த முதல்வர்?

## அடுத்த முதல்வர் ஜெயலலிதாதானா?

* 'சிவ சிவ!'





* குத்தினார்?

'சூப்பர் எதிர்க்கட்சி'



'பனம்பழம் விழுந்தது'



## நீங்கள் கேட்டவை — தராசு

* பாக்கியமுத்து, திருச்சி.

? கிரிக்கெட் பற்றிச் சில வார்த்தைகள்?

! போதாத வேளை.

* வி. ஆனந்தவேல், சரவணபுரம்.*

? நான் மாமூல் வாங்காததால் கள்ளச் சாராயம் விற்பவர்கள் என்னை மறைமுகமாகத் திட்டுகிறார்கள். எனக்கு யோசனை கூறவும்.

! நேர்மையாக நடந்து கொள்வதற்காக ஏசப்படுவதெனில் அதனை நீங்கள் பாராட்டாகவே ஏற்றுக் கொள்ளலாம். மக்கள் ஒத்துழைப்புடன் நீங்கள் கொஞ்சம் முயற்சி எடுத்தால் கள்ளச் சாராயம் விற்பவர்களுக்கு வாழ்க்கை நடத்த வேறு நல்ல வழி காட்டலாம். இன்று உங்களைக் இண்டல் செய்பவர்கள் நாளை வாழ்த்துவார்கள். நான் இப்போதே வாழ்த்தி விடுகிறேன்!

* டி. பியூலா, பொறையார்.

? அமைச்சர்களுக்கான நன்னடத்தை விதியை மத்திய அரசு கொண்டுவர உள்ளதே?

! ஒன்றா, இரண்டா எத்தனையோ விதிகள் இருக்கின்றன. அவற்றுள் பலவற்றின் தலைவிதி சரியாக இருப்பதில்லையே! அப்படி இதுவும் ஆகி விட்டால் வியப்பதற்கில்லை.

* ஆர். சுகானந்தம், சளுக்கை.

? தங்கள் அரசியல் ஜால்ரா அற்புதமாக ஒலிக்கிறது. குருகுலவாசம் எங்கே பயின்றீர்கள்?

! நடுநிலை ஆசிரமத்தில்.

* ப. சுகுமார் ராஜ், தூத்துக்குடி.

? இடைத்தேர்தல் முடிவுகள் தி. மு. க.வுக்கு ஓர் எச்சரிக்கைதானே?

! இடைத் தேர்தல் முடிவின் போது பச்சை, ஆரஞ்சு ஆயிற்று. ஜெயலலிதா ராஜினாமாக் கடிதம் அம்பலம், நடராஜன் கைது ஆகிய விவகாரங்களின் போது ஆரஞ்சு சிவப்பாகியுள்ளது. நின்று நிதானிப்பது தி. மு. க.வுக்கு நல்லது.

* ப. மூர்த்தி, பெங்களூர்.

? அருண்ஷோரியின் இந்தியன் எக்ஸ்பிரஸ் கட்டுரை, அது தொடர்பான நாடாளுமன்ற கலாட்டா, தக்கர் கமிஷன் அறிக்கை நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட இருப்பது — இவை பற்றி.

! எல்லா எதிர்க் கட்சிகளின் ஆற்றலையும் விட அதிகமான ஆற்றலை உடைய ஒரு சூப்பர் எதிர்க்கட்சி — அருண் ஷோரி.

* கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

? இடைத் தேர்தல்கள் இரண்டிலும் அ.தி.மு.க. பெற்ற வெற்றிகள் குருவி உட்காரப் பனம் பழம் விழுந்த கதை என்று எ. ம. மு. க. தலைவர் பாக்யராஜ் கூறியுள்ளது பற்றி?

! விழுந்த பனம் பழம் தலையைத் தாக்கி விக்கத்தை ஏற்படுத்தி விட்டதே!

* கே. வி. எஸ். மணியன், குடியாத்தம்.

? இடைத்தேர்தல் முடிவின் மூலம் அடுத்த முதல்வர் ஜெயலலிதா என்று சாத்தூர் ராமச்சந்திரன் கண்டுபிடித்திருக்கிறாரே?

! அதனால்தான் ஜெ. ராஜினாமாக் கடிதம் எழுத நேர்ந்ததாக்கும்!

* எஸ். சுந்தரராஜ், பாளையங்கோட்டை.

? பாதுகாப்புச் செயலராக ஜான் டவரை ஜனாதிபதி நியமித்ததை, அவரது ஒழுக்கக் குறைவைக் காரணம் காட்டி அமெரிக்க செனட் ரத்து செய்தது பற்றி...?

! பாராட்டு, செனட் அங்கத்தினர்களின் துணிவு, தார்மீக நோக்கு ஆகியவற்றுக்கு மட்டுமல்ல; இத்தகைய உரிமையை செனட் அங்கத்தினர்களுக்கு வழங்கியுள்ள அமெரிக்க அரசியல் அமைப்புக்கும் சேர்த்துத்தான்.

* கே. எம். ரவிச்சந்திரன், மதுரை.

? டீ. வி., டி. வி. — எது சரி?

! ஏ. பி. ஸி. டி. என்று சொல்லிப் பாருங்கள் டீ என்று நெடில்தான் வரும்.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

வி. ஆனந்தவேல் M.C.,
சரவணபுரம்,
நெல்லிக்குப்பம்
— 607 105.



# ஓரம்கட்டப்படுகிறார், கோபால்சாமி

ஈழத்துக்குப் போனாலும் போனார்; வை. கோபால்சாமியின் அரசியல் வாழ்க்கைக்கே ஆபத்து வந்துவிட்டது! ஒரு பக்கம் பிரேமதாஸா, ராஜீவ் காந்திக்குத் தந்தி அடித்து, 'விசா இல்லாமல் சென்று வந்த கோபால்சாமி மீது நடவடிக்கை எடுக்க வேண்டும்' என்று வற்புறுத்துகிறார். இன்னொரு பக்கம் தி. மு. க. வில், கோபால்சாமியின் வளர்ச்சியைப் பிடிக்காத நபர்கள் இதுதான் சந்தர்ப்பம் என்று அவரைக் கட்சியிலிருந்து நீக்கவே வேண்டும் என்று ஆரம்பித்து விட்டார்கள். நிகர விளைவு, கருணாநிதி கோபால்சாமியை ஓரம் கட்டி வைத்திருக்கிறார்!

சமீபத்தில், அமைச்சர் கே. பி. கந்தசாமிக்கு ஒரு பாராட்டு விழா நடந்தது. இதில் வரவேற்புரை ஆற்றிய வை. கோ. வுக்குப் பலத்த கைதட்டல்! இதனால் கலைஞர் சங்கடப்பட்டது தெரிந்தது. மேடையிலிருந்த பிரமுகர்கள் யாரும் கோபால்சாமியுடன் பேசவில்லை. கலைஞரும் தமது பேச்சின் தொடக்கத்தில் மேடையில் உள்ளவர்களின் பெயர்களைக் கூறும் போது, கடைசியாகத்தான் கோபால்சாமியின் பெயரைச் சொன்னார். தி. மு. க. தலைமை, மாவட்டச் செயலாளர்களிடம் 'கோபால்சாமியை அழைத்துப் பொதுக் கூட்டங்கள் போட வேண்டாம்' என்று கேட்டுக் கொண்டிருக்கிறது. இன்னும் சில காலம் பாராளுமன்றம் பக்கம் தலை வைத்துப் படுக்க வேண்டாம் என்று கூட கோபால்சாமிக்குக் கூறப்பட்டிருக்கிறதாம்!

கோபால்சாமியோடு தொடர்பு கொள்வதற்கே அமைச்சர்கள், கட்சி முக்கியஸ்தர்கள் தயங்குகிறார்கள். வை. கோ., கடந்த இருபது நாட்களாகவே கலைஞரைச் சந்திக்கவில்லை. நெல்லை, சிதம்பரனார் மாவட்டங்களில், கோபால்சாமிக்குத் தொண்டர்களிடையே நல்ல செல்வாக்கு உண்டு. அந்தச் செல்வாக்கை உடைக்கும் கைங்கர்யத்தில் அந்த மாவட்டங்களைச் சேர்ந்த சில சட்டமன்ற உறுப்பினர்கள் இறங்கியிருக்கிறார்கள். தூத்துக்குடி நகர் மன்றஉறுப்பினர்பெரியசாமிதீவிரகோபால்சாமி ஆதரவாளர். இவர் மாவட்டச் செயலாளராகவும், முனிசிபல் தலைவராகவும் இருக்கிறார். இவரிடமிருந்து மாவட்டச் செயலாளர் பதவியைப் பிடுங்க ஏற்பாடுகள் நடக்கின்றன!

"ஏதோ ஓர் உணர்ச்சி வேகத்தில் வை. கோ. தவறு செய்து விட்டார் என்பதற்காக, இப்படி அளவுக்கு மீறித் தண்டிக்கக் கூடாது" என்று நொந்து போய்ச் சொல்கிறார்கள், பல தி. மு. க. தொண்டர்கள்.

— நமது நிருபர்
படம்: சுபா

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: லெ. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
அறுமாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

# உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

உங்கள் குழந்தைக்கு நான்காம் மாதத்திலிருந்தே பாலோடு திட உணவும் தேவை. அப்போது ஸெரிலாக் அனுகூலம் அளியுங்கள்.

**போஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு முறை ஸெரிலாக் ஊட்டும் போதும், புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின், மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்குச் சத்துக்களும் சரியான விகிதத்தில் உங்கள் குழந்தைக்குக் கிடைக்கிறது.

**சுவை அனுகூலம்:** ஸெரிலாக் சுவையில் குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம்:** ஸெரிலாக் ஏற்கனவே பதமாக்கப்பட்டது: பாலும் சர்க்கரையும் கலந்தது. காய்ச்சி ஆறிய நீரில் கலந்தாலே போதும்

**தேர்ந்தெடுக்க அனுகூலம்:** இப்போது ஸெரிலாக், மூன்று வெவ்வேறு வகைகளில்!

*சுகாதாரமான முறையில் தயாரிக்கவும், சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*




இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

RK SWAMY/FSL/3112/TAM